யாயநற் சுற்ற முண்டங் கடக்கரும் பொருளு முண்டு
தூயநற் சுரூபா னந்தன் றொண்டர்க டிறந்த தென்னே.

அன்பர்பா லார்வ முண்டங் கரும்பவச் செற்ற முண்டு, வன்பதார் விஷயந் தன்மேன் மாறிடாக் குரோத முண்டு, முன்புறப் பக்க மேல்கீழ் முழுதுமா நிதியு முண்டு, தன்பமில் சுரூபா னந்தன் றொண்டர்க டிறந்த தென்னே. (உ)

ஒன்றொடுங் கலந்தி ராத வுறவின்மை பெரிது முண்டு, பொன்றினு மசைவு றாத முரண்வலி புகலி லுண்டு, கன்றிடும் வயிரி யோடுங் கலக்கமி லன்புண் டென்றாற், றுன்றருட் சுரூபா னந்தன் றொண்டர்க டிறந்த தென்னே. (௩)

கல்லுறு சிந்தை யெல்லாங் கரைக்கும்வல் லபமு முண்டு, வல்லவர்க் கொருகா லத்து மிரங்கிடா மறமு முண்டங், கெல்லையற் றிடுமி ரக்க மிறையொடு மிக வுண் டென்றாற், றொல்லைநற் சிவப்ர காசன் றொண்டர்க டிறந்த தென்னே. (௪)

முன்பினு மிலைவு நீர மொழிதரு விரக துண்டு, நன்கொடு நீங்கு காணு ஞானமாந் செருக்கு முண்டு, வன்புறு துன்பம் வந்தான் மயக்கமில் களிப்ப துண்டு, துன்பமில் சுரூபா னந்தன் றொண்டர்க டிறந்த தென்னே. (௫)

கோத்தலை குலைத்து மேலாங் குணமின்மை பெரிது முண்டு, பார்த்தவ ருயிர்கண் ணூலே வாங்கு

பண் பின்மை யுண்டங், கேத்துறு மேழைகட்கே
யெளிவரு மியல்புண் டென்று, லாத்தனன் சுருபா
னந்த னன்பர்க டிறந்த தென்னே. (சு)

உலகியல் புருவு ணர்ந்த வுன்மத்த மிகவு முண்டு,
தலைவன தருள தன்றித் தணிப்பரும் பித்து முண்டு,
மலைவுறு பகுதி போந்து வாதனை மாண்ட துண்டு,
நிலையுடைச் சுருபா னந்த னேசர்க டிறந்த தென்னே.

தன்னினு மிறைவ னன்பர் தமைவிடாப் பாச
முண்டு, நன்னினு மிதரர் தம்மை நணுகிடாத் துவேஷ
முண்டு, துன்னும்வன் னெஞ்ச வஞ்சர்க் கருளிடாச்
சோர முண்டாற், றென்னுநற் சுருபா னந்தன் சித்
தர்க டிறந்த தென்னே. (அ)

* எத்தினர்க் கருத்தே செய்தங் கெளிவரு மிச்
சை யுண்டு, தோத்திரச் சூழ லுற்றுச் சுழலும்வன்
பற்று முண்டு, சாத்திரப் பேய்க ளுக்குச் சலனஞ்
செய் தவறுண் டென்றாற், றீத்தனற் சுருபா னந்தன்
சித்தர்க டிறந்த தென்னே. (கூ)

கரையில்பே ரின்பத் தாராக் காமுகர் விஷய
கோப, நுரையறு பொருடம் முன்னே யொளித்
துப்பே ணிடுமே லோபர், முரிவில்பே ரின்பத் தீசன்
வயமுயிர் காணு மோகர், நிரையுமெம் மதமுந் தாமா
நிமலர்க டிறந்த தென்னே. (க0)

---

* எத்தினர்க்கருத்தென விசைநோக்கி யிருந்தது

வரும்பவத் தாருச் சிற்ற மாற்சரி யத்தர் தன்னைத், தருங்குரு பரன்றா னன்றித் தாழ்ந்திடாத் தெம்பர் தீரா, வரும்பவ நாச னெங்கட் குண்டெனு மகங்கா ரத்தர், பரம்பரமா யானைய ன்னிய பண்பினர் துறந்த தென்னே. (௧௧)

நிலவருட் பொறையர் நேதி நேதியே நிரூப கத்தாற், குலவுறு நற்சந் தோஷர் குருபரன் முழுது மென்னச், சொலிறையுற் றிடும்வி வேகர் தோய்வெதி ரிக்த சாந்தர், தொலைவில்சித் தவிரோ தத்தர் தூயவர் துறந்த தென்னே. (௧௨)

உற்றவா றோபி தங்க ளொழிந்தவா றுதரு மாமான், முற்றுமாய் மொழிபிறந்து முடிந்தமோ னத்த ராமாற், பற்றுவீ டின்றி நின்ற பராமிழ்தா னந்தர் தாமாற், றுற்றசீர்ச் சுருபா னந்தன் றொண்டர்க டுறந்த தென்னே. (௧௩)

சுட்டிய வெவையுந் தாமாய்த் துறக்கவே றொன்றின் றாஞல், விட்டதும் விடாது மன்றி வேதமோர் நான்கும் பேணப், பட்டிமை வுமல்லாப் பரம்பரன் சுரூபா னந்தன், சிட்டர்க டுறந்தா ரென்னும் வார்த்தையுஞ் சிறப்ப தன்றே. (௧௪)

அடியவர்திறத்து நிந்தாஸ்துதி முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

## இருபத்தொன்பதாவது

# நெஞ்சிற்கமைவுரை.

நேரிசைவெண்பா.

உப்பகன்ற நீர்க்கூழு முண்டாற் பசிகெடுமா
லப்பதுண்டு கூவல்குள மாறதனி - லிப்படியைப்
பார்த்தமையாய் நெஞ்சே பரந்தெழுந்து சென்றாலும்
பேர்த்துள தின் மேல்வருமோ பேறு. (௧)

பல்காய நற்கறியும் பானெய்ப்பழத் தோடடிசில்
செல்வாய தேசஞ் செறிந்தாலு - மெல்லவுனை
யூட்டாலு முண்டே லுறுபிணிமற் றியாதொன்றால்
வீட்டாதோ நெஞ்சே விரைந்து. (௨)

நல்ல வறுசுவைநா வுக்கினினி மாத்திரமே
யெல்லை யிருவிரலே யல்லதில்லை - மெல்ல
விருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே
பொருகடலைத் தான்கடப்பாய் போய். (௩)

ஆடை யழகினை நன் காதரித்தே யாங்கதற்கென்
றோடி யுறுபொருளுக் குற்றுழன்றாய் - கூடியதேல்
வண்ணா னெலிமருவார் வைப்பிடமற் றின்னவற்றா
லெண்ணேயோ நெஞ்சே யிடர். (௪)

கந்தையொடு வெண்ணீறு கன்முழைபாழ்க் கோயில்
முங்கையுள சீத முறுமென்னின் - வெந்துயரக்

பல

கோடையினிற் கோவணமுங் கூடமிகை யித்தனைகா
ணுடையினிற் காரியந்தா னுங்கு. (ரு)

நீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டாமை
யேயா வமைந்தா யிடர்நெஞ்சே - சாயோ
கடையானார் காய்பசிக்கே கால்குலைவர் கற்றோ
ரடையாரோ வாங்கமைவின் பால். (சா)

அமையாதே பெற்றதனை லாங்காங்கு நன்றென்
றிமையா தெழுந்தோடு கின்றாய் - சமையாச்
சிறுமைக்கு வித்ததுவாத் தேறாய் மனனே
மறுமைக்கு மஃதே மறைப்பு. (எ)

ஆற்றங் கரைப்பசுத்தா னக்கரையோ டிக்கரையாய்த்
தோற்றும் * பசப்பைத் தொடர்வுறுமே - யாற்ற
வதுவேயோ னெஞ்சே யலைந்தலைப்பட் டோடு
மிதுவே புனக்கிதனற் பேறு. (அ)

இருந்தவிடத் தேதும்வரக் கண்டிருப்ப தன்றோ
பெருந்தகைமைக் காபரணம் பேதாய்-மருந்தெனவே
யாங்கினியார் தங்கடையிற் சென்றிடினு மாதரியார்
பாங்கிதுகாண் பாழ்நெஞ்சே பார். (கூ)

உணர்ந்தார்க் குடம்பு மிகையென் றுலக
முணர்ந்தா ருணர்ந்தே யுரைத்தா - ரிணைந்தாம்
பொருண்முழு தும்விட்டா லும் பொய்யுடம்பிற்கா தன்
மருளதுவா நெஞ்சே மறித்து. (க0)

* பசப்பு - பசுமை.

இல்லாத தில்லை யுளதுதனி ராதென்று
நல்லார் துணிபொருளை நாடுங்கா - லெல்லா
மமைந்தபடி யேவருமா லாங்கசைவெ னெஞ்சே
சமைந்தபொரு டாமறிவார் தாம். (கக)

இங்கேதன் னானுயிரை யேதமறக் கண்டவிடத்
தங்கே யெலாமமைய லாயிருக்க - வெங்கேனுங்
காடு மலையுங் கடந்துடம்புக் காய்வருந்தி
யோடுவதே னெஞ்சே யுரை. (கஉ)

அமைதற் குபாய மறிந்திடநீ வேண்டிற்
கமையுற்ற ஞானக் கரும்பைத் - தமையுற்ற
வாரியர்பாற் பெற்றங் கவரடிக்கே யேவலினை
யோரியல்பாற் செய்நெஞ்சே யுற்று. (கங)

நீடுந் தலைகீழ்கான் மேலாகி நின்றானுங்
கூடும்படி யொழியக் கூடாதா - லோடி
வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி
* யிருந்தாலோ நெஞ்சே யினிது. (கச)

நல்லோரை மேவி நலங்கிடக்க வங்குள்ள
பொல்லாங்கு கொண்டாடிப் போகாதே - யெல்லா
மருளியவா செய்தங் கலைதொழிநீ நெஞ்சே
பொருளியல்வே றில்லையினிப் போற்று. (கரு)

* இருந்தாலன்றோ வென்பது - இருந்தாலோவென மரீஇயிற்று.

வைதலும் வாழ்த்துதலும் வார்த்தையினிற் கற்பித்து
நையுமது நெஞ்சே நலமன்று - மெய்யும்
புரையிடத்து வாயுப் புரைக்குமொழி யென்றே
யுரையிடத்துக் கோளொழிநீ யுற்று. (கசு)

ஒன்பதுவா யாலு மலஞ்சொரிய வூத்தைதகமழ்
புன்புலையார் குற்றப் புலா லுடம்பை - யன்புடனே
யேத்துவார் வைவா ரிழிவுரைப்பா ரல்லாதா
ராத்தமா மெய்யுணர்வார்க் காங்கு. (கஎ)

வாயுவன னீர்பிணிதான் மற்றும் பலபல பா
வாயசட வேதுவினு லாம்பயனுக் - கேயவொரு
செற்றநலங் கொண்டிலையேற் சேதனமே யுத்தனையு
மற்றவனை நெஞ்சே மதி. (கஅ)

ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்துங் கொள்ளாதே
சாரமுள தெவ்விடத்துந் தான்கொண்டு - சீரவுணர்
நல்லோர்கள் சொல்லை நழுவாமை நீகொண்டு
நில்லா யிதுவே நெறி. (க௯)

பெற்றதுவே கொண்டமைந்து பேரிழவிற் கொல்கா
குற்றநல மென்கோள் குறுகாதே - மற்றும் [தே
பயனின் மொழியாதே பார்த்துளமே நல்லோர்
நயமுமற வாதே நட. (உ0)

பொய்க்கனவும்பேய்த்தேரும் போலுமுடல் போமனை
சிக்கெனவே நாதன் றிருவடியை - செக்குருகிப் [வுஞ்
பூண்டுவிடா தேவிடத்து போற்றியிரு நெஞ்சேநீ
மீண்டுபிற வாதே விட. (உக)

ஆண்ட வியல்பை நினைந்து நினைந்துருகி
வேண்டிமிக மெய்யன்பை மேன்மேலு - மாண்ட
வடியிணையே பூண்டமைவா மாரமிழ்தை நெஞ்சே
யொடிவறவே நீயுண் டிரு. (உஉ)

நெஞ்சிற்கறிவுரை முற்றுப்பெற்றது.

---

முப்பதாவது

## சிவப்பிரகாசசுவாமிகள்

## திருச்சாழல்.

---

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

இறையுணர்த்து மளவினிலெக் காலமுமெய் யுண ர்வானேங், கறையுடல மளவெனமுன் கலங்குவதங் கென்னேடி, நிறையவனல் விறகிருக்க நிகழ்மதன மில்லாக்காற்,சிறுகறையா னரித்துணல்போற் றிகழ்ந் திடுங்காண் சாழலோ. (க)

அருமறையா கமமநந்த முகங்களினு லுரைத்தா லு, மரியபரம் பொருளினையிங் கறியவொண்ணு தென் னேடி, யருமறையா கமமறைந்தென் னரியனு யெழு ந்தருளித், திருவடியை யருளினல்லாற் றெரியாகாண் சாழலோ. (உ)

---

சாழல் - ஓர்விளையாட்டு.

மாத்திரையி லொருமொழியான் மாமுனிமீட்டு ணர்த்திடுமேற், சாத்திரநாற் பார்ப்பதனைற் றருபய னென் சாற்றேடி, சாத்திரத்தாற் றற்பரத்தைத் தானி தென வறியவொண்ணு, வார்த்தையிது கலகலென வடித்திடலாஞ் சாழலோ. (ரு)

எங்குமொழி வறநிறைந்த வெல்லையிலாப் பேரி ன்ப மிங்கொருமா னுடனகி யெழுந்தருள்வ தென் னேடி, சங்கைகெட மான்கொடுமான் பிடித்தாற்போ ற் றானுடம்பாய், நங்களுடம் பழிப்பதற்கு நடந்தது காண் சாழலோ. (சு)

ஒப்பரியா னெண்மலர்த்தா ளளித்தலுமே யுல குயிர்மற், றெப்பொருளுங் கண்டிலே யென்செய்த வா றியம்பேடி, யெப்பொருளு மாய்நின்ற திணையடி யே யாதலினுன், மெய்ப்படவே கண்டவர்க்கு வேறி லைகாண் சாழலோ. (எ)

உடம்பதிலா னுடம்பாகி யுடம்பழித்துத் தானுக் கத்,• திடம்படவே மொழியுமதங் கென்பெறத்தான் செப்பேடி, யிடம்படவே மறுபயனங் கில்லாதபயன் மனைழபோ, லடங்கவழி யாப்பொருளா வருளினன் காண் சாழலோ. (அ)

இப்படிவே றறவிறைவன் யாவையுந்தா னுயி ருக்க, மெய்ப்படவே சமயங்கள் பிணங்குவதென் விளம்பேடி, செப்பிடவே திமிரமுறு நயனத்தோர் மதிபலவா, மப்படியே யறுசமய மலத்திடுங்காண் சாழலோ. (எ)

இருந்தபடி சிவமாகி யிருந்ததனை யெமக்களித்த,
பெருந்தவற்குக் கைம்மாறு தானுண்டோ பேசேடீ,
யருந்தவற்குக் கைம்மாறொன் றில்லையருளை நினைந்த
தனா, லெரிந்தவழன் மெழுகெனவென் புருகிடல்காண்
சாழலோ. (௮)

வானோரு மண்ணோரு மறையுமறு சமயமுமாங்
கேனோரு மலமாக்க வெமக்களித்த தென்னேடீ
யேனோரு மலமாக்க வெமக்களித்த தெம்பெருமான்
மாறாய சுதந்தரமே மற்றில்லைகாண் சாழலோ. (௯)

செய்யசிவப் பிரகாசர் சிறியோமை யாண்டருளி
யையமற நங்குலமுன் னாட்கொண்டான் காணேடீ
யையனருட் டிறநினையே னழிந்துவிழுந் தெழுந்தல
றேன், மெய்ம்முழுதும் விதிர்விதிரேன் வினையேனான்
சாழலோ. (௧௦)

திருச்சாழல் முற்றுப்பெற்றது.

---

## முப்பத்தோராவது
## பழித்துரைமாலை.

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை

விரித்தகண்ணிற் றிரித்தகண்ணில் விழித்தகண்
ணிலெல்லா, மிருக்குமருளி னின்றேயும் விளம்பவொ
ண்ணா வீசன், றரித்துவந்த திருமேனி தன்னையெ

ணக் கரித்துத், தானேதா னுக்கவந்த தன்மைவேடங் கிடிகொள். (க)

உரைத்தபொருள் யாவையிலும் புரைத்தலின்றி நின்றே, யுரையுணர்வா லுணரவொண்ணு வொளிமி குத்த வொருவன், வரைத்துவந்த திருமேனி மண்ணின்மயக் கறுத்து, மலர்க்கழல்கள் சூட்டவென்றே வந்தவேடங் கிடிகொள். (உ)

தோன்றிநின்ற பொருள்களெல்லாந் தொட்டு நின்றே யாவுந், தோன்றுமை தோன்றிநின்ற தொன் றலொடு வந்து. வூன்றிநின்ற வுணர்வுதன்னை யுணர் வானி லிருத்தி, யுள்ளநிறங் கொள்ளவந்த கள்ளவே டங் கிடிகொள். (ங)

நிகழ்ந்துநின்ற பொருள்களெல்லாஞ் செருமி நின்றே யாவுந், தெரிவரிய பெரியபிரான் நீர்ந்துவந்த கோல, நிகழ்ந்துவந்து முகந்தரித்து நிகழ்வுகெட முழுத்தி, நிகழ்வானி னிறங்கவர நிகழ்ந்தவேடங் * கிடிகொள். (ச)

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
தாழிசை.

உருத்தவவ்வ விடந்தோறு மொப்பிலாப்பெருங் கண் ணுதய மாக்கிக்
கருத்தற்ற விடந்தோறுங் காண்பானு யெணையங்கே கரந்தா னென்னே. (ரு)

* கிடிகொளென்பது-பழிப்புரைத்திசைச்சொல்.

கெட்டவவ்வ விடந்தோறுங் கேடில்லாப் பெருங்கண்
கெழுமு வித்துப் [ணே
பட்டவென் றுயர்தீரப் பழையதன் னிலையிலே
பதித்தா னென்னே. (சு)

வேறு.

உன்னரிய தன்னமே யென்னுயிரை யொடுக்கி
யொழியாமை யெவ்விடத்து மழியாமை காட்டித்
தன்னடியே ஞமாறு பின்னையெனக் களித்த
தத்துவனார் தங்கருணை சாற்றலா மளவோ. (எ)

பழித்துரைமாலை முற்றுப்பெற்றது.

---

## முப்பத்திரண்டாவது
## தோழிக்குரைத்தல்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முத்தே வருந்தேடு மூலப் பொருடன்னை மொய்குழலாயேடி கேளாய், பித்தா முபாதிப் பெருந்துயர்ப் பவ்வப் பிறவிப் பிணிக்கோர் மருந்தா, மத்தாடு மைம்புலன் றன்னின் வழிமாறி மனவுரை மாண்டவருளே, சித்தா யொளிருஞ் சிவப்பிர காசர் திருவடித் தாமரை காணே. (க)

சொல்லிய ஞானிக் கினிப்பிறப் பில்லாமை தூமொழி யாயேடி கேளாய், நெல்லு முதலாம் விதைகணெருப்பில் வறுத்தான் முளையாதாற் போல,

வல்லும் பகலு மறவே சுடரு மறிவாம் வடவை யெரி யில், வெல்ல வரும்பவ வித்தா மவிச்சையும் வேவ லான் மேன்முளே யாவே. (உ)

துய்யமெய்ஞ் ஞானிக் கிருவினை கூடாமை தோகை நல்லாயேடி கேளாய், பொய்ய வுடற்செயல் புத்துடம் பாதலாற் போந்தவவிச்சையற் றுத்தான், பொய்யாய வூனி லறிவுக்கு முன்புள்ள விச்சையோ டேவந் தறு மான், மெய்ய வறிவால் விளங்கலான் மேல்வினை மேவா து வெந்தறுந் தானே. (ங)

கோதற்ற ஞானி யிருந்திடுந் தன்மையைக் கொங் கைநல்லாயேடி கேளாய், வாதற்ற மாமறை முற்றுஞ் சிரங்களால் வந்தது வாழ்த்திநின் றேத்தி, யோதற் கரிய வுணர்வின்பமேயா யொருகற் பனைகளு மின்றி, யாதுக்கு மங்கங் கதுவாகி யன்பர்க் கறிவா யிருந்தி டுந் தானே. (ச)

மெய்ஞ்ஞானி கட்கு விரதங்கள் கூடாமை மெல் லிய லாயேடி கேளா, யஞ்ஞான மாயையைச் சுட்டுக் கொடல்ல தறிவுதி யாது தித்த, விஞ்ஞான மாயையி னலதன் காரியத் தாகும் விரத மயறுன், மெய்ஞ் ஞான மாகி விளங்கலான் மேல்வினை மேவலொன் றுலுமே வரதே. (ரு)

உரைமன மாண்டுள்ள வொண்கழ லான்றன்னை யொப்பிலா தாயேடி கேளாய், புரைநன வோடு கனவு சுழுத்தி புகலுந் துரியமுன் னுக, வரைமுழு துங்க ழன் றேபரத் தோடுயிர் வையமுங் கண்ணில் விழுங்

கிக், கரையிறந் தின்பக் கடலா யிருந்திடுங் கண்ணே
கண் ணுயிடல் காணே. (கா)

தோழிக்குரைத்தல் முற்றுப்பெற்றது.

---

முப்பத்திமூன்றுவது
## அறிதியுரைத்தல்

அடியிரண்டாய்த் தம்மிலோத்துவந்த
குறள்வெண்செந்துறை.

இந்த வுடலம் விடுவதன் முன்விரைந் திப்பவந்
தீராவிடின், வந்துவந் துபல ஞகிப் பிறந்தெய்த்து
மாண்டே விடுவர் * கிடீர். (க)

சாதல் பிறத்த லெனுங்கேடு தானறத் தம்மை
யுணரா விடிற், போதல் வருதலாற் பொன்னூச லாட்
டொரு காலத்தும் போகா கிடீர். (உ)

உம்மை யுணர்ந்து பவச்சுடு காட்டையொப்
போடேகழலா விடி, னிம்மை மறுமையி லேபிடித்
தும்மை யெல்லாம் படுத்துங் கிடீர். (௩)

ஊனை வடிவென்றல் விட்டுத்தன் னுண்மையை
யுள்ளவா காணு விடின், மானு மழுவுமாய் வந்தாலும்
வன்பவ மாளா திருக்குங் கிடீர். (௪)

---

* கிடீரென்பது-தேசிகப்பழிப்பிடைச்சொல்.

இப் * பிறப் பிலே தமையுணர்ந் தெல்லாப்
பிறப்பு மொழியா விடிற், றப்பி யுடல்கொண்டு
கொண்டு சதங்கையுங் காலுமாய் நிற்பர் கிடீர். (ரு)

ஆறி யறிவே வடிவென் றிருந்தல்ல லெல்லாங் கழியா
விடிற், சூறைகொண் டேமாயை யும்மையூ ணூக்கித்
தோற் பாவைக் கூத் தாட்டுங் கிடீர் (சு)

மேலா லறிவோ மொரு தேத விரைந் தும்மை மெய்
கண்டு கொள்ளா விடிற், கோலா கலஞ்செய்து வந்
தும்மை யாசாபாசாசங் குமைக்குங் கிடீர். (எ)

பந்தசங் கற்பனை யிற்றலை வைத்துப் படாதெ
லாம் பட்டிடாதே, யெந்தை கழல்கூடி னெங்கெழி
லென்ஞாயி றென் றிருக் கல்லாங் கிடீ. (அ)

நாடிக் குரவன் கழறல் வைத்துண ராதனை
நானென் றிடிற, கூடிப் பெருஞ்சுற்ற ० மத்தின் றலை
யிலே கொள்ளியை வைக்குங் கிடீர். (கூ)

மெய்யே யுரைந்த வறுதிசொற் கொள்ளார்
விலங்குவேதாள மொப்பா, ரையோ பவங்கடந் தேற
லோர் காலத்து மாணையே யில்லை யில்லை. (க0)

அறுதியுரைத்தல் முற்றுப்பெற்றது.

---

* பிறப்பிலேயென்பது-பிறப்பில்லேயென விரித்தல் விகாரமாயிற்று.

० அதின்றலையென்பது - அத்தின்றலையென விரித்தல் விகாரமாயிற்று.

சிவமயம்.

# முப்பத்திநான்காவது அருமையுரைத்தல்.



அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த குறள்வெண்செந்துறை.

நான்மறை யோதிப் பொருளுரைத்து நாடறி யக்கல்வி சாற்றினுலுந், தானது வாகை யரிதுகா ணுஞ் சலிப்பற நிற்கை யரிதுகாணும். (க)

இணங்காமை யெல்லா மறத்துறந்தே யிருட்டற வேதாந்த மோதினுலும், பிணங்கா திருக்கை யரிது காணும் பேரின்ப மாகையரிது காணும். (உ)

எல்லை யிலாகம மேறவோதி யேதுக்க ளெல்லா மியம்பினுலு, மல்ல லறுக்கை யரிதுகாணு மறிவாயி ருக்கை யரிதுகாணும். (ந)

சைனசந்நியாசம்.

பற்றற விட்டுத் தலைப றித்துப் பாணியைப் பண் ணிப் பயின்றக்காலு, முற்ற நிலைநிற்கை யரிதுகாணு முடிய நிலைநிற்கை யரிதுகாணும் (ச)

ஆறுசமயப் பொருளுங் கற்றே யங்குள்ள தர்க் கங்கள் சாற்றினுலும், மாறியிருக்கை யரிதுகாணு மதுவிது வாகை யரிது காணும். (ரு)

வேறுபிறிதிலா மெய்ம்மைதன்னை வித்தாரமாக விளம்பினானு, மாறியிருக்கை யரிதுகாணு மவிரோத மாகை யரிதுகாணும். (௬)

தேறியுலக மனத்தினையுஞ் சிற்பர மாகநாஞ் செப்பினாலு, மாறியிருக்கை யரிதுகாணு மவிரோத மாகை யரிதுகாணும். (௭)

அருமையுரைத்தல் முற்றுப்பெற்றது.

---

## முப்பத்தைந்தாவது
## வளவியுடன்படுத்தல்.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
தாழிசை வெள்ளைச்செந்துறை.

இமைத்து விழிப்பதற் கில்லைவாணா ளிதிலுள்ள துன்பங்களெண்ணில்கோடி, யமைத்தனைப் பார்த்தல் லலறுநெஞ்சே யாண்டவ னென்றென் றரற்ற * வாரீர். (௧)

மின்னிலு நொய்தில் வுடம்பின்றன்மை மேன் மேலும் வந்திடும் வேதனைக, ளன்னதே யில்வுடம் பாவதாறு லாய்வானை யெப்போது மாயவாரீர். (௨)

---

* வாரீரென்பது-நெஞ்சையுயர்த்திக்கூறல்.

இல்லாது வேண்டினும் வந்திசையா வுள்ளது தள்ளினு மூட்டுமாறு, லெல்லாம் வுரக்கண்டோ ரிச் சையின்றி யிருந்த படியே யிருக்கவாரீர். (௫)

என்னுணே கேளிஃ தொன்று நெஞ்சே யேதே னுஞ் செய்தினி யுள்ளகாலந், தன்னைக நாயோமை யாண்டுகொண்ட தாள்களை யோவாது சாற்றவாரீர்.()

பொன்று முடம்பு பொருந்துமின்பம் புன்னுணே நீராகும் புன்மைநெஞ்சே, யென்றபி னெல்லாம் வீழ விட்டேயிருந்த படியே யிருக்கவாரீர். (௫)

ஒன்றெனி லாயிர கோடிதுன்ப மோய்வின்றி யேவரு மோரினெஞ்சே, யொன்றுமற் றுள்ளநா மாயிருந்தே யுளநாள் கழிக்க வொருப்ப டீரே. (௬)

வளவியுடன்படுத்தல் முற்றுப்பெற்றது.

---

முப்பத்தாறுவது

# மநோரதம்.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த

தாழிசைவேண்செந்துறை.

முருந்கனு நாலு முகனுந்தேட மூல மொருகுரு மூர்த்தியாகிப், புருந்தடி யார்தொழ வீற்றிருக்கும் பூங்கோயிலாக நான் பெற்றிலேனே. (க)

மறைகளு மென்று மறிவரிய மலரடி கண்டுநான்
வாழும்வண்ணம், மிறைவனார் தன்றிருக் கோயிறன்னி
லேகி தனு மொன்றாகப் பெற்றிலேனே. (உ)

பாசங்கள் வேரைப் பறிக்கும் வண்ணம் பலிக்
கென்று பேரிட்டுப் பையப்பையத், தேசிக னார்தா
மெழுந்தருளுந் திருவிதி யாகநான் பெற்றிலேனே. ()

உள்ளூறு நோய்களை மொன்றின் மாற்று மொப்
பிலானந்தரை யுள்ளுதோறு, மள்ளூறு சிந்தையார்
கண்சொரியு மானந்தக் கண்ணீர்நா ளுக்கிலேனே. (ச)

பாமாலை கொண்டு தனையருளப் பாவியேன்
கண்காணப் பாரில்வந்த, சீமான் புகழ்கேட்க வாக
மெங்குஞ் செவியாய்த் திகழ்ந்திடப் பெற்றிலேனே. ()

அச்சந் தவிர்த்தென்னை யாண்டுகொண்ட வருளை
நினைதொறு மன்புகூர, வுச்சி தொடங்கி யடியளவுமு
ளமா யிருக்க நான் பெற்றிலேனே. (சு)

கருவேலை யுள்விழுந் தாழுமென்னைக் கண்டஞ்ச
லென்றுவந் தாண்டுகொண்ட, வருண்மேனி காணவ
நந்தகோடி யாகத்திற் கண்ணுகைப் பெற்றிலேனே. ()

அவமே பிறந்திறந் தாழுமென்னை யாழாம லஞ்
சலென் றாண்டுகொண்ட, தவராசனைப்பா டிடமயிர்க்
கா லெல்லாம் வாயாகப் பெற்றிலேனே. (அ)

போகந் திரண்டருண் மேனியாகிப் புலையேனை
யாளப்புவியில்வந் த, பாத மணமுண்டு வாழநாசி
பதினா யிரங்கோடி பெற்றிலேனே. (கூ)

கழலிணை யாவருங் காணவந்த காரணனார் தாமெ ழுந்தருளும், பழவடி யார்திரு வாசஞ்றும் படி யாய்க் கிடக்க நான் பெற்றிலேனே. (கo)

மநோரத முற்றுப்பெற்றது.

---

முப்பத்தேழாவது

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

### ஏவலுக்கிசையாக்கரணத்திகழ்ச்சி.

அடிநான்காய்த் தம்மிலோத்துவந்த இரட்டைக் குறள்வெண்செந்துறை.

ஓவாதே பிறந்திறந் துழிதரு மென்னை, யோகோ வென் றருள்செய்யு மொழியாருஞ் சுரூபன், றேவா நற் றிருமேனி நினையாத கண்க, ளவையெல்லாங் கண்ணல்ல செந்நீர்பாய் புண்ணே. (க)

தடையில்லைத் திருவாசல் சகலமுஞ் சுரக்குந், தன்னையே தரவல்ல தலைவள்ளல் சுரூப, னடிவறக் கொடிகட்டி யிருக்கவு முயிர்க, ளோடிவந் தடையாத வுணர்வின்மை யென்னே. (உ)

கல்லாத முழுதையுங் கற்பித்தோர் மொழியாற், கடையோமைப் பொருளாகக் கடைக்கண் வைத்த ளித்த, வல்லாளன் சுரூபன்சீர் நினையாத மனந்தான், வன்பாறை யிரும்பன்று வலித்து வலித்தே. (ங)

ஏவலுக்கிசையாக்கரணத்திகழ்ச்சி முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

# முப்பத்தெட்டாவது

# சிவப்பிரகாசசுவாமிகள்

## ஏவலிசைத்தல்.



அடியிரண்டாய்த் தம்மிலோத்துவந்த
தாழிசைவெண்செந்துறை.

கேளாய் செவியேநங் கீழ்மைகண்டும்புகுந் தாண்டவன்
மாளாத சீர்த்தியே மன்னு மொலியெங்கு மாகவே.()
உடலேநீ மேவும் பரிசெலா நம்மை யுடையவன்
றிடமாந் திருமேனி யான திண்மைகண்டுந் தேராய்நீ.
வாராய் நயனமே வாராதே வந்தெம்மை யாண்டானைப்
பாராய் முழுது மவனாகி நின்ற பரிசினை. (௩)
நாவேநீ யுண்ணுஞ் சுவையெல்லா நம்மை யுடையவன்
றேவா ரடியாய திண்மைகண் டுண்ணவுந் தேராய்நீ.()
* வாச•முழுதுமவ் வாசாம கோசர மானவ
னேச மிலிகோல மானநன் மைகண்டு நாசியே. (௫)
மாராய்ப்பர விர்த்தியே வாராதே வந்தெம்மை யாண்டவன், சீரார் திருப்பணி யாகவே செய்யாய் செயலெல்லாம். (௬)
ஓராய் நிவிர்த்தியே யொன்று மொழியா விறை வரைச், சேரா தவருடன் சிந்தை கனவிலுஞ்சேராதே.

---

* இச்செய்யுளிற் பயனிலைதொக்கது.

மனமேநீ சங்கற்ப மாக நினையும் பொருளெல்லாங்
கனமாம் பரஞ்சுடர் கற்பனை யாகக் கருதாய்நீ. (எ)

சித்தமே நீசிந் தனையாய் நினையும் பொருளெல்
லாம் வைத்த மலரடி யல்லதின் மைகண்டு வாழாய்நீ.

ஐய மறவிட் டறுதி யிடுமிப் பொருளெல்லாஞ்
செய்ய சிவப்பிர காசரென் றேதெளி வாய்மதிநீ. (க0)

ஏவலிசைத்தல் முற்றுப்பெற்றது.

## ஙக-வது நற்குறி.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

பாரும்பரனு ரருளவருங்குறி பாதாதிகேசமுங்
கம்பித், தோர்வுமிழந்து வுரோமமுகிழ்த்து வுள்ளமுந்
தீமெழு காய் விடுமே. (க)

கலையும்வளையுடன் கற்புமிழந்தறி மாலுங்கரைய
றுமே, யலையுங்கடலே முணுவெனுமன்பர்பாலையன்வ
ருங்குறியே. (உ)

என்புமுருகி யெதிரிலின்பவ்வெள்ள மெங்கும்ப
ரந்திடுமே, தன்பெருந்தன்மைதன் னாலுமறிவொண்
ணாச் சம்புவருங்குறியே. (ங)

ஊனுமுயிரு முணர்வுமுணர் விடை யாதுமுருகி யொன்றாய்த், தேனுமமிழ்துமாய்நின் றுதித்தித்திடுஞ் செய்யோன் வருங்குறியே. (௪)

சதுரைமறந்தறி மால்கொண்டு தன்னையுந் தானி ழைந்தோவியம்போ. லெதிர்வுங்கழிவுமற் றின்பமீதூ ருமா லெங்கைவருங்குறியே. (௫)

விச்சையவிச்சை விவேகாவிவேகங்கள் விடுபற் றுங்களவிற், றுச்சதுணர்த விலாமைபோற்றேன்றுது தூயோன் வருங்குறியே. (௬)

உரையுங்கழுத்துள மும்முருகிக்கண்ணுறு மொப் பிலாறுகியோடும், புரையுமறநினைந் தின்பமீதூரும் புரணன் வருங்குறியே. (௭)

நற்குறி முற்றுப்பெற்றது.

## ௪0-வது பல்லி.

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அருவுருவ லானுருவ மாகிவரு மாகி
லாதிமறை தேடரிய வண்ணல்வரு மாகிற்
சுருபனெனை யுடையகல தோழன்வரு மாகிற்
றுளக்கமற நல்லதிசை சொல்லுசிறு பல்லி. (௧)

ஓடுமன நம்பினுட ணுறவுசெயு மாகி
  னுள்ளநிலை மெள்ளவுணர் வாகிவரு மாகி
னூடுமிட மெங்குமறி வாகிவிடு மாகி
  னல்லகுர னல்லநிசை சொல்லுசிறு பல்லி. (உ)

செப்பமுடி யாதபொருள் செப்பவரு மாகிற்
  சிலுப்பற விழுக்கவல தீரன்வரு மாகி
விப்பவ மறுக்ககழ லிங்ஙன்வரு மாகி
  லின்னமொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி. (ங)

ஆறவடி வைக்கவல வாதிவரு மாகி
  லருஞ்சிவ மெனக்கெளிய வையன்வரு மாகில்
வேறுமொழி யாவிரகன் வீதிவரு மாகின்
  மீளவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி. (ச)

இரவுபக லொழியவரு மிரவிவரு மாகி
  லின்பவடி வானசிவ மிங்ஙன்வரு மாகில்
விரவியெனை யாளவல வீரன்வரு மாகின்
  மீளவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி. (ரு)

என்னுளமிழ் தூறநிறை யின்பம்வரு மாகி
  லென்றுமொழி யாதபர மேசன்வரு மாகின்
மன்னுமுணர் வாகிய மணாளன்வரு மாகில்
  வாழவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி. (சா)

இம்பர்க டமக்கரிய வும்பன்வரு மாகி
  லுரையுணர் விறந்தவுணர் வுருவன்வரு மாகி

லெம்பர மறந்திகழு மின்பம்வரு மாகி
யின்னமொரு காலவரவு சொல்லுசிறு பல்லி. (௭)

பல்லி முற்றுப்பெற்றது.

---

## ௪௧-வது கொடி.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
தூ.ண்வெண்செந்துறை.

கருவார் புழுச்சிறைக்கே கடையேன் புகாதவண்ணங்
குருவாகி வந்தான்வரிற் கொடியே புவனைக்கூடே. (௧)

மாறும் பிறவிபயன் மாத்திரையொன் றிற்றீரக்
கூறும் விரகன்வரிற் கொடியே புவனைக்கூடே. (௨)

தோலான் மறைத்தமலச் சுமையினைநா னென்கின்ற
சோலாகலந் தீர்த்தான்வரிற் கொடியே புவனைக்கூடே.

தொண்டில்லை யல்லர்நாயேன் றொழும்புகந்தாண்
டுகொண்ட, கொண்ட லெழுந்தருளிற் கொடியே புவ
னைக்கூடே. (௪)

நற்றேவர் நின்றுணங்க நாயேனை யாண்டகோலங்
குற்றேவல் கொள்ளவரிற் கொடியே புவனைக்கூடே. (௫)

காமாதிக மானதன்னை நாயேற்கு நல்கவந்த
கோமா னெழுந்தருளிற் கொடியே புவனைக்கூடே. (௬)

உரையுணர் வற்றதொன்றை யுள்ளங்கை நெல்லி போலக், குறைகழ றந்தான்வரிற் கொடியே யுவைகூறே. (எ)

திண்டாடத் தேவரெல்லாஞ் சிறியேனைக் கண்டு கொண்டு, கொண்டாள வந்தான்வரிற் கொடியே யுவைகூறே. (அ)

ஞாலமும் விண்ணுநிற்க நாயேனை யாண்டுகொள்ளக் கோலமாய் வந்தான்வரிற் கொடியே யுவைகூறே. ()

நெடியானு மயனுநிற்க நேயமிலா நீசனெனைக் குடியாக வாண்டான்வரிற் கொடியே யுவைகூறே. ()

வேறு.

கோகிலக் குஞ்சுதம் பிள்ளைபோலுங் குறிக்கொ வளர்க்குங் குலக்கொடியே, யேகநற்சோதியை யென் னையாளு மெம்பிரானை யிங்கெழுந் தருளென்னே. (கக)

கொடி முற்றுப்பெற்றது.

---

## சஉ-வது கோழி.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
தூய்வெண் செந்துறை.

சாவாதுமூவாது தன்னைத்தந்த தம்பிரானிங்கே யெழுந்தருள, நாவாரநாதன் றிசையைநோக்கியழைக் கிடாய் கோழிக் குலக்கொடியே. (க)

கண்டாருயிருண்டு நம்மைமகல்குங் கருணையனிங்
கெழுந்தருள வண்டனிருந்த திசையைநோக்கி யழைத்
திடாய்கோழிக் குலக்கொடியே. (௨)

மோனமொழியான் முழுதுமோதி முடித்தவெங்
கோமா னெழுந்தருள, ஞானவிநோதன் றிசையை
நோக்கி யழைத்திடாய்கோழிக் குலக்கொடியே. (௩)

கோழி முற்றுப்பெற்றது.

---

## ௪௩-வது கூடல்.

கலிவிருத்தம்.

மாலும் பிரமனு மற்றுள்ள தேவரு
ஞாலமு நிற்பா ரருபந்தான் சாற்றி
யால மெனைக்கொண் டமிழ்தந் தனைத்தந்த
கோலம் வருமாகிற் கூடுவாய் கூடலே. (௧)

கூடல் முற்றுப்பெற்றது.

---

நாற்பத்திநான்காவது

# சிவப்பிரகாசசுவாமிகள்

## கிளிப்பயிற்று.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மூலந் தனக்கில்லா மூல மென்னீர்
முழுதுமாய்த் தானே முளைத்தா னென்னீர்

காலங்கண் மூன்றுங் கடந்தா னென்னீர்
கண்ணுக்குங் கண்ணாய்க் கழன்று னென்னீர்
கோலங் குருவுருவாய் வந்தா னென்னீர்
குடிமுழு தாட்கொண்ட கொண்ட லென்னீர்
சீலம் பரவிய செல்வ மென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (க)
பந்தமாய் வீடாய்ப் பரந்தா னென்னீர்
பாவிப்பார் பாவனைக ளானா னென்னீர்
சந்த மிதுவென்ன வொன்று தென்னீர்
தன்னை யருள்குருவாய் வந்தா னென்னீ
ரந்தமிலா வன்பிறவி தீர்த்தா னென்னீ
ரருட்கழல்க ணந்தலையில் வைத்தா னென்னீர்
சிந்தைதன்னிற் றித்திக்குந் தேனே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (உ)
சாற்றுஞ் சடங்கறுக்க தானா னென்னீர்
தத்துவ னேயென்னீர் தலைவா வென்னீர்
போற்றுவார் தம்மைவிடாப் பொன்னே யென்னீர்
புரையறவே தானினைந்தாற் போகா னென்னீர்
காற்றுங் கறங்கு மெனச்ச லிக்குங்
கருத்தைக் கலக்க மறுத்தா னென்னீர்
சீற்றமி னெஞ்சகத்துச் சேர்வே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (௩)
உலவாத * பூமாரா யோங்கு கின்ற
வுள்ளொளியே யென்னீ ருடையா யென்னீர்

* பூமார்-மகத்துவமுடையவர்.

கலவாதெல் லாங்கலந்து கண்டு நின்ற
 கண்ணே கருமணியே பாவா யென்னீர்
பலவாகி நின்றே பகிர்ப்பொன் றில்லாப்
 பரமனே யென்னீர் பழையா யென்னீர்
சிலைபோலு மென்னெஞ்சிற் சேர்ந்தா னென்னீர்
 சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (௪)

கற்பனைக ளெல்லாங் கழித்தா னென்னீர்
 கருவாகி நின்றொளிருங் கண்ணே யென்னீர்
நிற்பனவுஞ் செல்வனவு மானா னென்னீர்
 நினைவறவே தானினைந்தா னிற்பா னென்னீர்
சொற்பலவா நூல்பலவுஞ் சொன்னா னென்னீர்
 துரிசறுக்காட் கொள்ளவல்ல சோதி யென்னீர்
சிற்பரமாய் நின்றொளிருந் தெளிவே யென்னீர்
 சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (௫)

கூறு பசைமயங் கோத்தா னென்னீர்
 கூறற்றா ருள்ளத்துக் கோற்றே னென்னீ
ராறாறு மையைந்து நாலேழ் தொண்ணூற்
 றாறு மவைவகுத்தங் காகா னென்னீர்
மாறுதல் வினைநோய் மாற்றா னென்னீர்
 மாசறுத்தாட் கொண்டருள வந்தா னென்னீர்
தேறுதா ருள்ளத்துச் சேரா னென்னீர்
 சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (௬)

இந்திரசா லம்போல வெல்லாந் தன்னு
 ளிதமிதமா கக்காட்ட வல்லா னென்னீ

ரந்தரமொன் றின்றியெல்லாங் காண்பானென்னீ
ரண்டர்க் கறிவரிய வத்தனென்னீர்
தொந்த விருண்மாய்த்த சுடரே யென்னீர்
துணையடியென் சென்னிமிசை வைத்தா னென்னீர்
சிந்தையுள்ளே மன்னிச் செறிந்தா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (எ)

அன்னையினு மென்றனக்கு நல்லா னென்னீ
ரமிழ்தத்தி னின்சுவையே யபயனே யென்னீ
ரென்னை யெனக் கென்னுளே யென்னிற்றந்த
வின்னமிழ் தேயென்னீ ரிறைவா வென்னீர்
பனுமறைக் கெட்டாத பாதா வென்னீர்
பழவடியார் பண்டாரப் பொருளே யென்னீர்
சென்னிமிசைக் கழல்சூட்டி யாண்டா யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (அ)

பொல்லாவென் போல்வாரைத் தேடி யாளப்
பூமியினின் மானுடனாய்ப் போந்தா னென்னீர்
நல்லார்க ளெல்லாரு நிற்க நாய்க்கு
நற்றவிசிட் டெனையாண்ட நாதா வென்னீர்
கல்லாமை கற்பித்த காளா யென்னீர்
கருணைக் கடங்கடலே யென்னீ ரென்னீர்
செல்லாத மீளாத செல்வ மென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (கூ)

ஒப்பொருவ ரில்லா வொருவ னென்னீ
ருத்தமர்க்கே கண்ணு யுதித்தா னென்னீ

ரெப்பொருளுந் தானு யிசைந்தா னென்னீ
　ரிடையறு வானந்த வெள்ள மென்னீர்
தப்பறவே யென்னைவலிந் தாண்டு கொண்டு
　தாளிணையென் சென்னிமிசை வைத்தா னென்னீர்
செப்பரிய சுவானுபவத் தேற லென்னீர்
　சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.　(௧0)

அள்ளூறு முள்ளத் தடியார் மெய்யி
　னணுகினோ யினையறுத்திட் டினிமே லொன்று
நள்ளாமை காத்துவந்த நம்பா வென்னீர்
　நானேநீ யாய்நயந்த நாதா வென்னீர்
விள்ளாமை யோர்கணமு மடியார் கூட்டம்
　விரவியினிக் குறைக்காலம் போக்க நாயேற்
குள்ளானே யருளியினி யுடலம் வீபோ
　துணர்ந்திருந்தே யொழிவிப்பா யென்னீ ரென்னீர்.
கிளிப்பயிற்று முற்றுப்பெற்றது.

---

நாற்பத்தைந்தாவது

## குறையுரைத்தல்.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கொண்டாள் குரவனே கூர்மய றீராதேனைக்
கண்டா ருயிருண் ணுங் கண்டக னென்பேனே.　(௧)

என்பணி கொண்டென்று மின்புற் னேன்மாயை
வன்ப ருபிருண்ணு மறவன்கா ணென்பேனே. (உ)

துறையுரைத்தல் முற்றுப்பெற்றது.

## சஅ-வது வரவுசாற்றல்.

அடிநான்காய்த் தம்மில் லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தோரணங்க ளூட்டு *மேடோ சோலையெங்குஞ் செய்யு மேடோ, தாணுமுறைகள் பொதிந்தெங்குந் தாய்பளிக் கேற்று மேடோ, வாரணமு மயன்முதலா மமருமங் கயர்வுறவே, யாதனை யாண்டுகொள்ள வாரியன்காண் வருகின்றான். (க)

வீதியெங்கும் வெள்ளைமணல் பரப்பிநீரை விடு மேடோ, வெற்றிக் கொடியுடனே விதானமேற் கட்டு மேடோ, வாதிவேத நாலுமுரா சாகவறைந் தாடு மேடோ, வென்பருள்ளங் கோயில்கொள்ள வெங்கணு தர் வருகின்றார். (உ)

சோகமோ காதியெல்லாந் துணிக்குநீர் விடு மேடோ, தொக்கமுற்ற பக்கமுற்றுந் துவக்கறுக் கிரு மேடோ, வாகமாக வருளாலே யனையவங்க ளது

---

* ஏடர்களோ வென்பது ஏடோவெனப் பன்மை ஒருமையாய்வந்த வழுவமைதி.

சாத்தி, யாறவடி வைக்கவெங்க ளண்ணலார்காண்
வருகின்றார். (௩)

வீணைவங்கி யங்களாலே வேதகீத மோது
மேடோ, விழுந்தெழுந்திங் கோலமிட்டு விரகழிந்திட்
டாடுமேடோ, பேணுமன்ப ராவியுண்டு பேராநன்
ளங் கோயில்கொள்ளப், பெக்கமுக்த மற்றவின்பப்
பெருமானார்தாம் வருகின்றார். (௪)

பூமியெங்கும் பொற்பூமாரி பொழிக்குதின் றிடு
மேடோ, பூரணப்பொற் குடங்களும் பூவிரியு மெடு
மேடோ, காமமெங்கு காற்றுமேடோ கலையிணை வாடு
மேடோ, கம்மையன்பர்க் களிக்கவென்று தம்பிரா
னார் வருகின்றார். (௫)

வரவுசாற்றல் முற்றுப்பெற்றது.

---

நாற்பத்தேழாவது

## சிவப்பிரகாச சுவாமிகள்

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

## அர்ச்சனை.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

என்னைக் குறித்தா னெழிலார் திருமேனி
மன்னற் கிடம்பிட மதியிலேன் காதலே. (௧)

ஓது மறைக்கு மும்பர்க்கு மரியவவர்
பாதம் விளக்குநீர் பண்பிலே னீர்மையே. (௨)

தேசுக்குத் தேசாந் திருவான மேனிக்குப்
பூசப் படுஞ்சாந்தம் புலையேன் மனத்தன்பே. (௩)

பார்த்ததெல்லாந் தானாய்ப் பழுதற்ற சோதிக்குச்
சாத்தும் பரிவட்டக் தமியேனேத் துஞ்சொல்லே. (௪)

தேடிமூவர் வாடச் சிறியோமை யாண்டவற்
* காடு மஞ்சன மறிவிலேன் கண்ணீரே. (௫)

ஏத்துமன்ப ருள்ளத் தின்பமா மீசற்குச்
சாத்துங் களபமுஞ் சதுரிலே னைசையே. (௬)

இணையேது மில்லாத வெழிலார் திருமேனிக்
கணியா பரணமு மறிவிலே னார்வமே. (௭)

தனையன்றி யொன்றிலாத் தம்பிரான் றிண்டோண்
மேற், புனையுந் திருமாலை புலையேன்சொன் மாலையே.

பாங்காக வந்தெம்மை யாட்கொண்ட பண்பர்க்குப்
பூங்கோயி லாவதென் புழுவார் குரம்பையே. (௯)

தூற்றுஞ் சுருதிக டொடா வரியவவர்க்
கேற்றுநந் தாவிளக் கெழிலாரு ஞானமே. (௧௦)

செல்லறீர்த் தென்சிந்தை மேவிய செல்வற்கு
நல்லதூ பந்தீப நாயேன் மனத்தன்பே. „ (௧௧)

---

* ஆட்டுமென்பது-ஆடுமெனப்பிறவினை தன்வினையாய் வந்தது.

எங்காத லுள்ளேநின் றின்பஞ்செ யீசற்குச்
சிங்காசன மென்றுந் தெளிவிலேன் சிந்தையே. (௧௨)

சாற்றுமறைக் கெட்டாத தம்பிரா னார்தமக்
கேற்றும் பரிகல மேழையே னுள்ளமே. (௧௩)

நோக்கரிய மேனியது நுண்ணுணர்வா மீசர்தமக்
காக்கிய போனக மறிவிலே னவியே. (௧௪)

ஐயமறுத் தாளு மழகார் சுரூபற்குச்
செய்ய வமிழ்தென்றுந் தெளிவிலேன் சிவனே. (௧௫)

ஆனதி லாகாத வானந்த நாடற்குப்
போனக மாவது புலையே னுயிர்தானே. (௧௬)

தெள்ளத் தெளிவாகுஞ் சிவப்பிர காசற்குக்
கள்ளப் பொறிபுலன் கறியமு தாகுமே. (௧௭)

போற்றுமன்பர் நெஞ்சிற் பொருவில் சுரூபனுக்
கேற்றுங் கறியென்ற னீடணை யாவுமே. (௧௮)

கண்ணுக்குக் கண்ணாகுங் கருதரு மீசனுக்
கெண்ணப் படுங்கறி யெல்லாமென் பாசமே. (௧௯)

செப்பரிய மேனியெங்கள் சிவப்பிர காசற்கு
முப்பழ மென்குண மும்மல முற்றுமே. (௨0)

ஞாலமெலா மாகி நின்றிடு நாதற்குப்
பாலுடன் றேனுமென் பாவக முற்றுமே. (௨௧)

திக்கா ளாதியொன்று மில்லாத செல்வனுக்
கக்கார மாவது மென்மதி யாகுமே. (௨௨)

போதக் கயிற்றாலே கட்டிக்கொண் டுள்வைத்தேன்
 போகலா மாகிற் போகீர்
போதப் பெருமாளே பூரண போதரே
 போகலா மாகிற் போகீர். (க)

வேதங் கீதைசொல்லிற் றென்றுநீர் போகாதீர்
 மெய்யும்மைக் காட்டித் தந்தீ
ராதி புராணரே யானந்த நாடரே
 யங்ஙனே போக லாமோ
வள்ளுறு முள்ளத் தளையிட்டு வைத்தே
 னங்ஙனே போக லாமோ
வாதி புராணரே யானந்த நாடரே
 யங்ஙனே போக லாமோ. (உ)

அனுபூதிநிலைய முற்றுப்பெற்றது.

## சசு-௯து உயிருணி.

### கலிவிருத்தம்.

மறைநான்முகனரன்வானவர் மயல்கொண்டின மயரப்
பொறையாமுட லளவாயுழல் புலையேன் பொருளாக
முறியாவெள முழுவின்பம தருவாகிய முதல்வ
னறைகூவியெ னகமன்னிய வருடானதி சயமே. (க)
பூதங்களை நானென்றுள போதம்முண ராதே
வாதம்பல சொல்லீயவ மேமாய்வுறு வேனை

வேதங்களு மறியாமலை ரடிசூட்டிய விகிர்தன்
பேதங்கெட வுள்வந்தமை பேசவறி யேனே. (உ)

காணேனவை னன்றிப்பிறி தொன்றும் முளவாக
நாணேனய மில்லாமையி னன்றும்மது வன்றும்
பூணேனினி யொன்றும்புனி தன்றாளிணை யன்றி
வீணேசெய்தே னுளமன்னிய விகிர்தன்செய்த விரகே.

எறிமாருத மெனவேகுலை மனமா மயறவிர
மறியாவுள மழியாவறி வுருவாகிய வளவன்
செறிவார்கழ லடியேன்றலை சேர்த்தீயெனை யாண்ட
தறியேனுள மழியேனரு வினையேன்செய்த வவமே. ()

பலவொன்றென வறியேன்பக விரவென்பது மறியே
னலதொன்றையு மறியேனறி வானந்தம தறியே
னலறென்றிய மறையீறவை நவில்கின்றிடு பிரமங்
குலவுங்குரு பரனென்னைக் குறிக்கேடுசெய் தனரே. ()

தத்தொம்பத மோதியொரு சற்றும்முண ராதே,
மத்தம்முறு வார்தம்முடன் மால்கொண்டுழல் வேனை,
யத்தன்னடி சூட்டியறி வாக்கியொளி காட்டி, மெய்த்
தன்மைய வருள்செய்தமை வினையேனறி யேனே. ()

முன்னைம்முழ தாங்கண்டிடு மூவாமுத லொருவன்
கன்னூரி கொண்டென்கன வஞ்சங்களை வித்துத்
தின்னைரரு ளடியாரொடு தகுவித்தெனை யாடேன்
வென்னூருயிர் முழுதுண்டதோ ரின்பமறி யேனே. ()

நற்றாயொடு சுற்றும்பொருண் முற்றும்முற வற்றுக்
கற்றாரொடு கற்பார்களை யற்றம்மற விட்டுத்
தெற்றார்மனஞ் செற்றுச்சிவ னற்றாளிணை பற்றிக்
கற்றாவென வுற்றுக்கசிந் துருகித்திரி வேனே. (அ)

அன்றாமென வொன்றாயறி வின்றாயறி கின்றா
யொன்றாவது மன்றாயொழி வின்றாயொழி கின்றாய்
நன்றாயது மன்றாய்நடு வின்றாய்முடி வின்றாய்
நின்றாய்பிறி தன்றாயெனை யுண்டாயுள நின்றே. (௯)

சீரார்சிவன் வந்தென்றனி நெஞ்சஞ்சிவ மாக்கிப்
பாராவிழி யாலேபவ பாசம்பறி வித்து
நேராவினை யுந்தானெடி துண்டாலுள நின்றே
யோராவமிழ் தாணானிது வென்னே யிதுவென்னே.()

உயிருணி முற்றுப்பெற்றது.

---

## ௫௰-வது அச்சோ.



அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

எழுகடலுங் குலவரையு மேழுலகு மெவ்வஞ்சத்
திறைக்கும் போதா, விழிகடையே னுளமன்னி யிணை
யிலிங்ங் காதிருந்தா னச்சோ வச்சோ. (௧)

அடித்துமனம் புலன்வழியே தூறுசெய்து மாறாப்
படுந்துணையிலேனை, யடித்தடித்துப் பாலூட்டி யானந்
தமெனக் களித்தா னச்சோ வச்சோ. (௨)

வலியப் பிடித்தாண்ட னையகோ
　　வாயைப் புதைத்தாண்டா னையகோ
கலிக்க ணாடாண்டா னையகோ
　　கண்ணேனைகண் ணுக்கண்டா னையகோ. (௨)

ஐயகோ முற்றுப்பெற்றது.

---

ஐம்பத்திமூன்றாவது

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

## தாய்வார்த்தை.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

வாசாம கோசரம் வந்ததென்றாள்
　　வானவ ரேமாக்கு மாமலர்த்தாள்
கூசாதென் சென்னியில் வைத்ததென்றாள்
　　குளித்தாள்கண் ணீர்கொண்டு கோதைதானே. (௧)
சென்னியில் வைத்த கரங்களென்று
　　டிருக்கிற நோக்கிய நோக்கமென்றாள்
வன்னிமுன் வைத்த மெழுகதென்ன
　　மாறா துருகினாள் வாணுதலே. (௨)
நீண்டுவெ னேசெய்ய பாதமென்று
　　டிருமாலுங் கண்டில னேடியென்று

ளாண்டவ னேயென்றாள் பின்னையொன்று
 மறிந்தில னேயென்றா ளாயிழையே. (௩)
வாசக மொன்றென்றா ளிப்பிறவி
 மாண்டதென் றாள்செய்த வல்லபந்தான்
பேச விரகில்லை காணுமென்றாள்
 பேசா திருந்தாளென் பேதைதானே. (௪)
உன்ன வரிய பொருளதென்றா
 ளோதவொண் ணாதென்றா ளப்பொருளைச்
சொன்ன விரகென்றாள் பின்னையொன்றுஞ்
 சொல்ல வறிந்தில டூய்மொழியே. (௫)
எத்திக் கடையேனை யாண்டதென்றா
 ளெப்போது மின்னமிழ் தாகின்று
தித்திக்கு மேதிரு வார்த்தை யென்றாள்
 செய்வ தறிந்திலள் சேயிழையே. (௬)
கைம்மாறு காணேன் கருணைக்கென்றாள்
 கம்பித்தாள் காயங்கண் ணீர்சொரிந்தாள்
விம்மா வழுதாள்பின் செய்தசெய்கை
 விளம்பு மளவோவென் மெல்லியலே. (௭)
ஏத்து[illegible] தேயடி யேனுமென்று
 ளின்ன மறியா மறைகளென்றாள்
சாத்துவ தேதிரு மேனியென்று
 டரிக்க வறிந்தில டையறானே. (௮)
உரியேனல் லேன்மற் றொருவர்க்கென்று
 ளுடையா னடிப்போ தொருகணமும்

பிரியே னெனச்சொன்னாள் பேச்சொழிந்தாள்
பித்தியா னாளென்றன் பெய்வளையே. (கூ)

ஒருமேனி கொண்ட பரிசே யென்று
முள்ளத்தா லுள்ளவொண் ணாதென்று
திருமேனி யெல்லாங் கருணையென்றாள்
செய்ய சுரூபனென் றுதிருவே. (க0)

தாய்வார்த்தை முற்றுப்பெற்றது.

## ஐம்பத்திநான்காவது
## தோழியுரைத்தல்.

தரவின்கொச்சகக்கலிப்பா... 

குருபர னாரென்றாள் கோலமென்றாள்
கோதிலருட்குணக் குன்றமென்றாள்
பெருமறை காணாத பீடுவாடப்
பேயேற் கெளிவந்த பித்தனென்றாள். (க)

கருணை பொழிகின்ற கண்களென்றாள்
கருக்கெட வைத்த கழல்களென்றாள்
மருளற வென்னைத்தா னாக்குவித்த
வல்லப மென்றாள்பின் வாக்கிறந்தாள். (உ)

பூங்கோயி லென்றாள்பொற் பீடமென்றாள்
புனிதனா ரென்றாள்பொன் மேனியென்று
மாங்கான வந்த நலமதென்று
னையனைநீர் மல்கி னணிமறந்தாள். (ங)

மீட்ட வீரகென்றாள் வேறொருகாணுள்
விழியால்வே தித்த வீரமென்றா
ளூட்ட வரிதென்றா ளுடலொன்ணு
நலமாஞ் சிவப்பிர காசனென்றாள். (ச)

செய்ய திருப்புன் முறுவலென்றா
டிருவான கோலத்தின் சீர்மையென்றாண்
மெய்ய னுரைக்கு முரையிதென்றாள்
விம்மினாண் மேன்மேலு மேவினளே. (ரு)

செய்ய வழகென்றாள் சென்றடையாத்
திருவென்றாள் சீமான் சுரூபனென்றாள்
பையப் பவம்பாழ் படவிழித்த
பார்வையென் றாள்பார்ப் பற்றனளே. (சு)

செந்தா மரைமுகஞ் செய்யவாய்கண்
திருப்பாதங் கைகளுஞ் செய்யமேனி
யந்தா மரைபெற்ற தார்பெறுவா
ரகத்தா மரையா லமிழ்தமென்றாள். (எ)

தோழியுரைத்தல்முற்றுப்பெற்றது.

---

## ருரு-வது எம்பாவை.

---

தாழிசை வெண்டுறை.

உண்பாணு முடுப்பாணு முழல்வாணு முடல்சாத்திக்
கண்காண வரிலலது கலக்கறுமோ வெம்பாவாய். (க)

ஆண்பெணலி யனைத்துயிர்க்கு மாதார மாயிடினுங்
காண்படியே வரினலது கலக்கறுமோ வெம்பாவாய்.

எம்பாவை முற்றுப்பெற்றது.

---

## ருசு-வது அக்கைச்சி.

தூஉள்வேஃசேந்துறை.

பிணஞ்சுடு தடியென்ன வென்னைக் கொண்டே
பெரும்பற்றை யெல்லா மறைச்சாடி
யணைந்த வென்னையு மப்படி யீறில்போ
தத்தில் விட்டனு போகத் திருந்தானே. (க)

ஆதி மாயையென் னக்கைச்சி யந்த
வாண்மக னுற்ற போதே கெட்டேன்
போதந் தானுஞ் சுமையென்று வீறில்
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே. (உ)

ஓது மாயையென் னக்கைச்சி யொப்பிலா
னென்னுற வுற்ற போதே கெட்டேன்
போதந் தானுஞ் சுமையென்று வீறில்
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே. (ஙு)

அக்கைச்சி முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

ஐம்பத்தேழாவது

# சிவப்பிரகாசசுவாமிகள்

## மால்.



குறள்வெண்செந்துறை.

சால மாலானே னம்மே யென்னைத்
  தானுகப் பார்த்தசெந் தாமரைக் கண்ணனுக்குச்
    சால மாலானே னம்மே
ஞாலங் காண்கிலே னம்மே யெங்க
  ளையனார் தந்திரு மேனியல்லான்
    ஞாலங் காண்கிலே னம்மே. (க)

பேச வறிகிலே னம்மே தன்றன்
  பேரா வருளும் பெருந்தன்மை யுங்காட்டிப்
    பேராசை யாக்கினா னம்மே
தேசு திகழுங்கா ணம்மே யெங்கள்
  செய்ய சிவப்பிர காசன் றிருமேனி
    தேசு திகழுங்கா ணம்மே. (உ)

மால் முற்றுப்பெற்றது.



சிவமயம்.

ஐம்பத்தெட்டாவது

# சிவப்பிரகாசசுவாமிகள்

## குரவை.



அடி நான்காய்த் தம்மிலொத்துவந்த

இரட்டைக்குறள் வெண்செந்துறை

சதுமறைக் கரியதா டமியனுக் கெளிவந்த
தன்மையைப் பாடியே குரவையிடு
தம்பிரா னெனையாண்ட கருணையின் பெருமையைச்
சகமெலா மறியவே குரவையிடு
கதுவுமுற் பவந்தனைக் கணத்தினிற் கருவறக்
கடைக்கண்வைத் தமைபாடிக் குரவையிடு
கல்வியு மழிந்தது கருத்தெல்லா மிறந்தது
கண்ணேனைகண் ணாய்த்தென்று குரவையிடு. (க)

ஒப்பிலா வொருமொழி யதனாலே முழுதையு
மோதிய வளம்பாடிக் குரவையிடு
ஆழிநிலை யாய பவபாச மொருகணத்
தொழித்தவா றதுபாடிக் குரவையிடு
செப்பிட வரியதோர் தெளிவந்தே னுளநின்று
தித்திக்குந் திறம்பாடிக் குரவையிடு
சிறியோனைப் பொருளாகத் தேடிவந் தாட்கொண்ட
செய்யசே வகம்பாடிக் குரவையிடு. (உ)

உலகேழும் விழுங்கிய வொளியாகு முணர்வையு
முண்டவொண் கழல்பாடிக் குரவையிடு
வுருவாகி யருவாகி யலவாகி யொழியாத
வுண்மையா னிலைபாடிக் குரவையிடு
சலமாரு மதியென்னக் குலையுமென் னுளனேதற்
சிவமாக்குந் தகைபாடிக் குரவையிடு
சதுரான மொழியும்புன் முறுவலுந் தமியேனைச்
சதுராழித் தமைபாடிக் குரவையிடு. (ரு)

குரவை முற்றுப்பெற்றது.

ஐம்பத்தோன்பதாவது

# ஸ்வரூபானந்த சுவாமிகள்

## குணலை.



அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

மற்றொ ழும்பொருண் மனித வேடமாய்
வந்த தென்றிடு குணலை
மாலு மாலுறும் பதமென் சென்னியில்
வைத்த தென்றிடு குணலை
யறைக டற்றிரை மனமழி மைப்பிலே
யழிந்த தென்றிடு குணலை
யறி வுருவமா யதை கண்டிட
வரிதாய்த் தென்றிடு குணலை. (க)

இறந்து போய்வரும் வழிதூர்ந் துபுல்
லெழுந்த தென்றிடு குணலே
யிவ்வு டம்பொடே யிருந்து முத்திக்கே
யிருந்தோ மென்றிடு குணலே
மறந்து முன்னியு மிராத போதமாய்
வாழ்ந்தோ மென்றிடு குணலே
வள்ள லாரருள் செய்த வல்லப
மறவோ மென்றிடு குணலே. (௨)

சுருதி களொரு கோடி சொல்லியுந்
தோன்று தென்றிடு குணலே
சுரூபா னந்தனோர் சொல்லி லானந்தந்
தோன்று மென்றிடு குணலே
கருத வொண்ணுத பொருளைக் கண்ணாலே
கண்டோ மென்றிடு குணலே
கருணை யங்கழ றன்னைக் கண்டுகண்
களித்தோ மென்றிடு குணலே. (௩)

சொலவி னில்வரு கலைய லைவலைத்
தொலைத்தோ மென்றிடு குணலே
சொலவொ ணுஞ்சுக சுரூப வாரியிற்
சுகித்தோ மென்றிடு குணலே
மலவு டலினின் மதிசே யும்மதி
மறந்தோ மென்றிடு குணலே
மதிய ழியவே வருமதி யையு
மதித்தோ மென்றிடு குணலே. (௪)

நிரந்தர வின்ப வெள்ள மெங்கணு
 நிறைந்த தென்றிடு குணலை
நிகில மென்பது மறவியுங் கூட
 நிகழா தென்றிடு குணலை
யிருந்து பாரென்ற விரகையெப் பொழுது
 மியம்பி நின்றிடு குணலை
யிப்ப டியேநாம் வாழத் தந்தானை
 யேத்தி நின்றிடு * குணலை. (ரு)

துணலை-முற்றுப்பெற்றது.

## கூO-வது பகடி.

அடி நான்காய்த் தம்மிலொத்து வந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

கழியாமை யூழியூழி யுறவாகி வருகின்ற
 கருவினை நாசனென் றிடுபகடி
கண்டிருந் தெனையாளக் கழல்காட்டிக் கொடியிட்ட
 கருணைமா மலையனென் றிடுபகடி
விழியாமலே தனையாக வெனைமாளச் சதுர்செய்த
 விரகினை யுடையானென் றிடுபகடி
விரவியே யுடலுயி ருலகெங்கண் முழுதையும்
 விரவாத வீரனென் றிடுபகடி. (க)

* குணலையென்பது-வீராவேசத்தாற் கொக்கரித்தல்.

சதகோடி விதமாக வெழுந்திடுஞ் சடங்கினைச்
சாடிய சதுரனென் றிடுபகடி
சதுமறை யொருமூவர் கலையுற வணங்கியுஞ்
சாருதற் கரியானென் றிடுபகடி
மதமானந் துணையாக வஞ்சத்தே செலுமென்னை
வலிந்துவந் தாண்டானென் றிடுபகடி
வாசாம கோசர வடிவினை மலர்க்கையின்
மணியென்ன வளித்தானென் றிடுபகடி. (௨)
அறிவானே டறிபொரு ளாகியே யெழுஞ்செல
லழகுறத் திரித்தானென் றிடுபகடி
யறிபொரு ளறிவினி லறிவித்தவ் வறிவைய
மறிவானி லழித்தானென் றிடுபகடி
பொறிபுலன் கரணங்கள் புகல்சீவ பரனென்னும்
பொருளற விழித்தானென் றிடுபகடி
பொருவில்லாவொளியாகிப் புரையறநிறைந்துள்ள
பூரணமே யானேமென் றிடுபகடி. (௩)

பகடி முற்றுப்பெற்றது.

---

அறுபத்தோராவது

# ஸ்வரூபானந்தசுவாமிகள்

## கழல்.

### கலித்தாழிசை.

ஒன்றிய சிந்தையு ளொன்றாய் நிகழுமே
யின்றென்னை யாண்டவ னின்பக் கழ
லிதுவென்ன வொண்ணாத விறைவன் கழல். (௧)

இருந்துதி கொண்டென் பிறவிநோய் தீர
மருந்தாகி மண்ணின்மேல் வந்தகழன்
மற்றொன்று மில்லாத வள்ளல் கழல். (௨)
முத்தி யடியேன்கண் முன்னே நிகழ்ந்திட
வெத்தி யென்னையாண்ட வின்பக் கழ
லெல்லாமா யல்லா விறைவன் கழல். (௩)
நாநா விதந்திர நாடரி தாய்வெறுந்
தானாகத் தந்த தலைவன் கழ
ருவா மறைதேர் தனிப்பொற் கழல். (௪)
அஞ்சாதே யென்றவ் வரங்கை யழியவென்
குஞ்சிமேல் வைத்த குரவன் கழல்
கூற்றத்தைக் கொன்ற குழகன் கழல். (௫)
ஆறும் படிநல்கி யாறு நெறிகளும்
வேறின்றி நின்று விளங்குங் கழன்
மெய்யுணர் வாய்நின்ற வீரன் கழல். (௬)
ஏழை யடியே னெழுபிறப் புங்கெட
வூழி முதல்வ னுணர்த்துங் கழ
லுணர்வான வானந்த வுண்மைக்கழல். (௭)
எண்ணா வமரர்க்கு மெட்டரி தாகியென்
கண்ணான கண்ணா ரமிழ்தக் கழல்
கடையேனை யாண்ட கருணைக் கழல். (௮)
ஒன்றுரு முற்றுரு மில்லா வகையென்னைத்
தன்னாகத் தந்த சதுரன் கழல்
சங்கை யறுக்குந் தலைவன் கழல். (௯)

பத்தி யடியவர் சித்தத்து ளேநின்று
தித்தித்தமிழ் தூறுந் தெய்வக் கழல்
சிற்சுரூ பானந்தர் செம்பொற் கழல். (௧௦)

கழல் முற்றுப்பெற்றது.

---

அறுபத்திரண்டாவது

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

## அம்மானை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அஞ்சின் பிணக்கை யறுக்கலா மம்மானை
யன்னிய மொன்றற் றிருக்கலா மம்மானை
துஞ்சும் பிறவி துடைக்கலா மம்மானை
சுரூப னடியிணை சூடினா லம்மானை. (௧)

கண்மூடிக் காண நினையார்கா ணம்மானை
கண்மூடி னார்தம்மைக் காணார்கா ணம்மானை
விண்மூடுஞ் சோதி விளங்குமே லம்மானை
விழியா துறங்கா திருக்கலா மம்மானை. (௨)

காலதிசை தேசங்கள் கண்டோநா மம்மானை
காணு நமையைதாங் காணுகா ணம்மானை
கோல மறிவல்ல தில்லைகா ணம்மானை [னை.
கொள்கைகொள் ளாமை குலைந்தோங்கா ணம்மா

அல்லும் பகலு மறியோங்கா ணம்மானை
யானந்த மேவடி வானோநா மம்மானை
சொல்லும் பொருளுங் கடந்தோநா மம்மானை
சுரூபானந் தத்தின் சுதந்தரமா மம்மானை. (ச)

அம்மானை முற்றுப்பெற்றது.

---

அறுபத்திமூன்றுவது

# சிவப்பிரகாசசுவாமிகள்

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

## பந்து.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஓதா ரணங்க ளுயர்ந்துபோற்று
முண்மை யுணர்வி னுலகுக்கெல்லா
மாதார மாகிய வப்பொருளை
யருளே வடிவா யெழுந்தருளி
யூதாங் யாய்நா னழியாவண்ணை
முச்சியின் மேலே யுவந்துவைத்த
பாதார விந்தங்கள் பாடிப்பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (க)
கொடியிடை யார்கனி வாயுங்கண்ணுங்
கொங்கையு மென்று குலாவுமாந்தர்

12

கொடியிடைப் பட்டு நுடங்குவேனை
   நோவாமே நோக்கியென் ஞோராவுள்ளச்
செடியிடை வந்து புகுதநல்கிச்
   செய்ய சிவப்பிர காசனிந்தப்
படிமிசை வந்த பரிசுபாடிப்
   பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௨)

பெண்மை யுதிரச் சிறையிற்புக்குப்
   பெருந்துய ரெய்திப் பிறந்துண்டாகும்
புன்மையை நானென்று போற்றிமாய்ந்து
   புழுவார் நரகிற் புகுதுவேனை
யொண்மை யரவணை யோனுங்காணு
   வொண்மலர்ப் பாதங்கள் சூட்டியாண்ட
பண்பை நினைந்துகண் ணீர்ததும்பிப்
   பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௩)

அந்தர வானத் தவருங்காணு
   வந்த வொளியி லசைவொறின்றிச்
சுந்தர வேடம் புனைந்தருளிச்
   சுரூபானந் தனென் றுயரந்தீரச்
சிந்துரச் சேவடி சென்னிசூட்டிச்
   செய்ய திருவாய் மலர்ந்தபோதே
பந்தனை தீர்ந்த பரிசுபாடிப்
   பந்தடிக் கவ்வாரீர பாவைநல்லீர். (௪)

வேதமு மாகம கீதைகளு
   மிருதி புராணமும் வேதமார்க்கர்

வாதமும் வல்லவ ருள்ளத்துள்ளு
　மன்னியுந் தோன்றாத வள்ளல்வந்து
பூதமும் பவுதிகந் தானுமற்றும்
　போதமே யாகிப் புரிந்துதோன்றிப்
பாத மளித்த பரிசுபாடிப்
　பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௫)

ஓரவுஞ் சொல்லவு மொண்ணாதென்ன
　வுபநிட முள்ளத்திற் றானுமன்பு
கூரவுங் கூறு மிறைவன்வந்து
　கொடுவினை யேனையாட் கொண்டானென்று
வாரவ னீங்கிவ ணைரென்றோதி
　யங்கையோ டங்கை யடித்துநக்குப்
பாரவ ரேசும் பரிசுபாடிப்
　பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௬)

திருகா வொருகாலுஞ் செவ்விதாகாச்
　சித்தந் திரித்த திறத்தையுன்னி
யுருகா ரருவி சொரியக்கண்க
　ளுயரா விழியா வொழியாவென்று
மருகா பெருகா வழியாவாகா
　வணுகா வகலா வயராவுன்னைப்
பருகா வமிழ்தினைப் பாடிப்பாடிப்
　பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௭)

ஏதாதி யேதந்த மென்றுதேடி
　யிமையவ ரேமாந்து நிற்கவின்னும்

வேதாதி நூலால் விளம்பவொண்ணா
மெய்ப்பொருண் மானுட வேடஞ்சாத்திப்
பேதாதி பேத மிலாததன்னைப்
பெறவ ருள்செய்த பெருந்தகையைப்
பாதாதி கேசம் பரவிநின்று
பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௮)

அந்தமு மாதியு மில்லாவொன்றென்
றுரண மோது மதுவேயன்றிச்
சந்ததி தென்னவொண் ணாதேயென்னுந்
தம்பிரா னென்னைத்தா னாக்கியென்னாற்
செந்தமிழ் மாலை புனைந்துகொண்டே
செய்ய சுரூபன் றிருவருளாற்
பந்தமும் வீடுமில் லாமைபாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௯)

சாத்திரங் கற்ற சதுரரெல்லாந்
தத்துவ மொன்று பலவென்று
காத்திர மாகக் கழிந்துபோகக்
கருணைக் கடல்கண்ணிற் காணவந்து
நாத்திரங் கத்தன் புகழேபாடி
நற்றொண்டு செய்திட நாயேனையும்
பார்த்தருள் செய்த பரிசுபாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௰)

தேகாதி யாகி யழியுமென்னைச்
செய்ய கருணையாற் சிசியிங்ங

ளுகாது காணென் றருளிச்செய்தே
யைம்புலத் தாலம் பொறியைநோக்கிப்
போகாத வண்ணம் புரிந்துநோக்கிப்
போதப் பெருங்கண் பொருந்தத்தந்தப்
பாகார் மொழியிணைப் பாடிப்பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவைநல்லீர். (௧௧)

பந்து முற்றுப்பெற்றது.

---

அறுபத்திநான்காவது

## பாங்கிக்குரைத்தல்.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சொல்லெல்லா நாத மென்னவும் பெற்றோஞ்
சும்மா விருக்கை தொழிலாகப் பெற்றோ
நல்லவ் னன்பரு ளைஞ்சேரப் பெற்றோ
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே. (௧)

படுக்கை படுதரை யாகவும் பெற்றோம்
பாணியி லேபலி கொள்ளவும் பெற்றோ
முடிக்கையுங் கோவண மாகவும் பெற்றோ
மொன்றுங் குறைநமக் கில்லைகாண் பெண்ணே. ()

எல்லாரு நம்மை யிகழ்ந்திடப் பெற்றோ
மிம்மை மறுமையச் சங்கெடப் பெற்றோ

நல்லான் மலரடி நாஞ்சூடப் பெற்றோ
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே. (௬)
வேண்டாமை யென்னும் விழுச்செல்வம் பெற்றோம்
வேண்ட லெனும்பிணி வேரறப் பெற்றோ
மாண்டவ னென்றுகு மன்பினைப் பெற்றோ
மையோ விதென்ன தவஞ்சொல்லாய் பெண்ணே. ()
எய்ப்பற்ற சிரை யுடுக்கவும் பெற்றோ
மெங்ஞனு முள்ளானை யென்னெனப் பெற்றோம்
பொய்ப்பத்தி மெய்ப்பத்தி யாகவும் பெற்றோம்
புண்ணிய னார்தந்த வாழ்விது பெண்ணே. (௫)

பாங்கிக்குறைத்தல் முற்றுப்பெற்றது.

---

அறுபத்தைந்தாவது

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

## வியந்துரை.



அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பாழ்த்த பிறப்பற்றுப் பார்ப்பா னும்போய்ப்
பாராப்பற் றற்றபா தத்தைப் பார்த்து
வாழ்த்தவா ரீர்பெண்காள் வாழ்த்த வாரீர்
வளமாஞ் சுரூபனை வாழ்த்த வாரீர். (௧)

தோற்றமெ லாந்தாமே யாகும் வண்ணஞ்
　சொன்ன விரகினைச் சொல்லிச் சொல்லிப்
போற்றவா ரீர்பெண்காள் போற்ற வாரீர்
　பொருவில் சுரூபனைப் போற்றவாரீர். (உ)

ஊற்றமெல் லாமுடைந் றுக்கு நைந்திங்
　குரைமாண்ட பேரின்பத் துய்த்த வெள்ளஞ்
சாற்றவா ரீர்பெண்காள் சாற்ற வாரீர்
　தற்சுரூ பன்பொற்றாள் சாற்ற வாரீர். (ங)

ஓர்க்கொணு வின்பமோர் மாத்தி ரைக்கு
　ளொளிர்வித்த வல்லப முன்னி யுன்னி
யார்க்கவா ரீர்பெண்கா ளார்க்க வாரீ
　ரழகார் சுரூபனென் றார்க்க வாரீர். (ச)

வியந்துரை முற்றுப்பெற்றது.

---

## சுசு-வது சுதந்தரன்.

இரட்டைத்தாள் வெண்செந்துறை.

ஏழைய யேற்கெளி வந்த சுதந்தர
　னெண்ண றெண்ணிலெட் டாத சுதந்தரன்
வாழ நாமுமெல் லாமடி யாருடன்
　மனித னய்வர வல்ல சுதந்தரன். (க)

கருது தற்குமெட் டாதவ னைப்புலன்
　காண வேவர வல்ல சுதந்தர

னொருது வட்டமிட் டேகழி யாவணு
மென்னை யாட்கொள வல்ல சுதந்தரன். (உ)

மூவ ரோடுமுப் பத்துமுக் கோடிமா
முனிவ ருக்குமெட் டாத சுதந்தரன்
பாவி யேனள வாகிவந் தென்னையும்
பார்வை தானறப் பார்த்த சுதந்தரன். (ங)

சதுரி ழுந்தழு மன்பர்த மன்புளே
தானி ருந்தழ காருஞ் சுதந்தர
னதிருந் தன்கழல் சென்னிவைத் தென்னையு
மன்ப ரோடுவந் தாண்ட சுதந்தரன். (ச)

சுதந்தரன் முற்றுப்பெற்றது.

---

சுஎ-வது தெய்வம்.

இரட்டைநாள் வெண்செந்துறை.

பந்தமறப் பார்த்தருளிப் பாதமலர் சூட்டிப், பார்ப்பதறத் திரித்தருளிப் பாரென்று நேரே, சிந்தையுள்ளே காட்டித்தந்த தெய்வங்கிடீர் தெய்வஞ், சிஞ்சிலுப்புப் போற்றுந்தெய்வந் தெய்வமன்று கிடிகொள்.

நடுக்குமிகு முடம்புதனை நடத்திக்கொடு திரிந்து, நாசம்வந்த போதாக நானென்செய்வே னென்னுந், திடுக்கங்கெடப் பண்ணிவிடுந் தெய்வங்கிடீர் தெய்

வஞ், சிஞ்சிலுப்புப் போறுற்றெய்வந் தெய்வமன்று கிடிகொள்.

தெய்வ முற்றுப்பெற்றது.

---

அறுபத்தெட்டாவது

ஸ்வரூபானந்தசுவாமிகள்

# சிவப்பிரகாச சுவாமிகள்

## இறைவல்லபம்.

அடி நான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைதூள் வெஃசெந்துறை.

பந்தனை யெல்லா மொருங்கும் படிசெய்ய
பங்கயக் கண்வைக்கவும்
பார்த்த பார்வையே பார்க்கும் படிசெய்ய
பாத மலர்வைக்கவுஞ்
சிந்தை யழித்துச் சிவமாக்கி யிங்ஙனே
தித்திக்கு மாவைக்கவுஞ்
செய்ய சுரூபனாற் கல்லது வேறொரு
தேவராற் செய்யலாமோ. (க)

அழிவின்றி யென்று மொருதன் மையினின்
றருண்மேனி கொண்டிடவு
மண்டரும் பண்டை யருமறை யுந்தேட
வாயா வெனையாளவு

# பாடுதுறை.

மொழியு மனமுங் கடந்த தமையென்கண்
முன்னே நிகழ்ந்திடவு
முற்று மொழியாச் சுரூபனுற் கல்லது
மூவராற் செய்யலாமோ. (௨)

காணும் பொருள்களுங் கண்ணுகக் காணும்
படிகடைக் கண்வைக்கவுங்
காட்சியு மாட்சியு மற்ற தமையிங்ஙன்
காணக் கழல் வைக்கவும்
பேணு மடியா ருளத்தைக் கரைத்திங்ஙன்
பிச்சாடத் தான்வைக்கவும்
பேரின்ப நாதனுற் கன்றிமா லீசன்
பிரமனுற் செய்யலாமோ. (௩)

கள்ளப் புலனுங் கரணங்க ளைங்குங்
கருத்தழிந் தோடிடவுங்
கருத்தழிந் தோடித் திரிந்திட் டவையெலாங்
கண்ணோகண் ணுக்கிடவும்
தெள்ளத் தெளிந்து செயலுஞ் சிவமாகச்
செய்யாமை செய்திடவுஞ்
சிவப்பிர காசனுற் கல்லது வேறொரு
தேவராற் செய்யலாமோ. (௪)

இவைவல்லப முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

## ௬௯-வது பகவதி.



அடி நான்காய்த் தம்மி லொத்து வந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சந்தமொன் றின்றி யிருக்க வேண்டுந்
தானே யழகிய ளாக வேண்டு
மிந்த வுடம்பிலே காண வேண்டு
மெங்குந் தானாகி யிருக்க வேண்டும். (௧)

காட்சியொன் றின்றி யிருக்க வேண்டுங்
கரத்தின் மணிபோலக் காண வேண்டு
மீட்சி செலவற் றிருக்க வேண்டும்
விடாதே பற்றாதே யிருக்க வேண்டும். (௨)

உள்ளதெ லாந்தானே யாக வேண்டு
மொன்று மின்றிக்கே யிருக்க வேண்டுந்
தள்ளினும் விள்ளா திருக்க வேண்டுங்
கழுவினு ரேதான் றழுவ வேண்டும். (௩)

விக்கின்றி யோநாறு செய்ய வேண்டும்
விளையாதே யெல்லாம் விளைக்க வேண்டுஞ்
செத்தின்றி யேசெத் திருக்க வேண்டுஞ்
செயலுஞ்செய் யாமையுந் தீர வேண்டும். (௪)

அழியாத தாகாத தாக வேண்டு
மன்னிய மாகியொன் றாக வேண்டும்

விழியா திமையா திருக்க வேண்டு
மெய்யும்பொய் யும்மற் றிருக்க வேண்டும். (ரு)

அல்லும் பகலு மொழிய வேண்டு
மறிவறி யாமை யொழிய வேண்டுஞ்
சொல்லும் பொருளு மொழிய வேண்டுந்
* தூரிய தாயணி ஙாக வேண்டும். (சா)

உள்ளும் புறம்பு மொழிய வேண்டு
முறங்கி யுறங்கா திருக்க வேண்டும்
வெள்ள வெளியா யிருக்க வேண்டும்
விளங்க வெளிதா யிருக்க வேண்டும். (எ)

பகவதி முற்றுப்பெற்றது.

---

## எ௦-வது வாழ்க்கைப்பாடு.

---

இரட்டைக்கூறன்கூவெண்செந்துறை.

தன்னிலே யெல்லா மிருக்கு மாகிற்
றானெல்லாத் துள்ளு மிருப்ப னாகிற்
பின்னிலன் முன்னில னவ னாகிற்
பெரிது முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (க)
குணக்குன்று தானா யிருப்ப னாகிற்
குணமிலி தானா யிருப்ப னாகி

---

* தூரியது தூரத்தது. தேசிகம்.

வினைக்கொன்று மின்றி யிருப்ப னாகி
வின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (உ)
அண்ட மணுவாப் பெரிய னாகி
லணுவண்ட மாகச் சிறிய னாகிற்
கொண்டார்கள் கொண்ட வடிவ னாகிற்
கூடி முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (ந)
நல்லதுந் தீயது மல்ல னாகி
னானுந்தா னாகி யிருப்ப னாகி
லில்லது முள்ளது மல்ல னாகி
லின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (ச)
ஒளியா யிருளா யிருப்ப னாகி
லுருவா யருவா யிருப்ப னாகிற்
களியாக் களியா யிருப்ப னாகிற்
கடிதின் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (ரு)
ஓரா யிரம்பே ருடைய னாகி
லுண்மைக் கொருபேரு மில்லை யாகில்
வாராதே நம்பால் வருவ னாகில்
வந்து முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (சு)
இருக்கச்செய் தேயெங்கும் போவ னாகி
லிளமை மூப்பின்றி யிருப்ப னாகி
லருக்கற்குந் தாளொளி யாவ னாகி
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (எ)
சொல்லாதே சொல்லி யிருப்ப னாகில்
சுகசுரு பன்னா யிருப்ப னாகி

லெல்லாமா யல்லா திருப்ப னாகி
லின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (அ)
கண்ணின்றி யாவையுங் காண்ப னாகிற்
கையின்றி யேகைப் பிடிப்ப னாகி
லண்ணிய னயதி தூர னாகி
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (கூ)
வித்தின்றி யேநாறு செய்வ னாகில்
விளையாதே போகம் விளைப்ப னாகிற்
சத்திய மும்பொய்யு மல்ல னாகிற்
சால முடிந்ததென் வாழ்க்கை பாடே. (கo)
எக்காலு மென்றுங் கெடாத வன்னே
யெப்பொரு ளுந்தந்த வம்பொ ருளே
* துக்காய்ப் புகுந்து நின் றுடவேண்டுந்
தொந்தசி யென்றுநின் றுட வேண்டும். (கக)

வாழ்க்கைப்பாடு முற்றுப்பெற்றது.

---

## ஏக-வது சந்நியாசம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செந்தூகி தூந்தண்டு நீர் தரித்துச் சிகைநூ றெசித்துச் செபங்கள் பண்ணி, முந்திநீர் நீரினிற் காக்கை போல முழுகித் திரியும்பிடாரநீரே, பெந்தகா யம்மல

---

* துக்கம்.

நீரின் மூழ்கிப் பிரளயகாலஞ் செபித்தக்காலும், வந்துணர் வாய பிரமமாமோ மதித்துநீர் பாரீர் ○பிடாரர் ‡ நீரே. (௧)

காமிய கன்மபா வம்பவத்தின் காரண மாமென்று கட்டுரைத்து, மோமமுன் ஞமபி சராசமாதி யுற்றுநீர் செய்யும் பிடாரநீரே, யாமமெதா ன்னில்லைமுன் புள்ள தன்றி யவற்று விகழ்கன்ம மாயுமக்கே, யேமமில் லாப்பவ மெய்திடாதோ வெங்ஙனே சொல்லீர் பிடாரநீரே. (௨)

அன்ன மயமாதி கோசமெல்லா மகத்துளே யாகுதி செய்து தூய்தாய்ச், சொன்ன மறையை யுரைத்து நெய்யைத் தழலிற் சொரியும் பிடாரநீரே, யன்னிய மாய வியுநெருப்பிலாகுதி யாலவை போயகல, மன்னிய போதப் பிரமமாமோ மாசறப் பாரீர் பிடாரநீரே. (௩)

குந்தி மிதித்துங் குளங்கரேக் கொள்ளைமண்ணுனூட ஞ்சுமைசெய்து, சிந்துவுஞ் சேதுவுங் கங்கை யாறுந் தேடியே யோடும் பிடாரநீரே, யிந்த வுடலா மலக்கடத்தை யெத்தனை தீர்த்தநீ ராட்டினாலு, மந்தமில் போதப் பிரமமாமோ வாய்ந்துநீர் பாரீர் பிடாரநீரே, (௪)

---

○ பிடாரர்-பாம்பாட்டும் வேஷக்காரர்.

‡ நீரரேயென்பது-நீரேயென விகாரமாயிற்று.

அலைவாயில் வடுப்போலே யலைந்தலைந் தொருகாலு
நிலையாத பிறவியை நிலைசெய்த படிசேனாய்
கலையாரப் பெருஞ்சோதி தாளிணை தரித்தபி
னலையாதங் கழிவில்லா வவனேநா னானேனே. (௨)

ஆடுதை யமாவாசி யலைகட லாடியுந்
தேடியு மோடியுந் திரிந்தேதுங் கண்டிலேன்
கூடிய வந்நாளிற் குரைகழ றரித்தபி
னாடியே தேடி யவனேநா னானேனே. (௩)

பாஞ்ச பவுதிகமாம் பரிணாம வுபாதிக்கே
மாஞ்சேது மறியாதே மயல்கொண்டு திரிந்தெங்கு [தி
மோஞ்சேனைப் பெருஞ்சோதியுணர்வேயென் றுணர்த்
வாஞ்சேயா னந்தமா மவனேநா னானேனே. (௪)

கற்பனை தவமென்று கலைவீத மாந்தர்த
முற்பனக் குழியிலே யுழைத்துணர் விலியேனை
நிற்பன திரிவன நீயேகா ணெனச்சொன்ன
வற்புதங் கண்டபி னவனேநா னானேனே. (௫)

தோன்றிய வுடலுக்குந் தாரகமா மனத்துக்குஞ்
சான்றாகிச் சலியாதே நின்றதற் சுருபத்தை
யூன்றவென் மனத்திடை யுத்தம னுரைத்தபின்
னன்றேசஞ் சலமின்றி யவனேநா னானேனே. (௬)

செறிவான வடிவினைச் சிபுரு டோத்தம
னெறியான மறையாலே நேதிநேதி யென்றுபின்
பிறியாத பேரின்பப் பிரமமே நீயென்றென்
னறியாமை தவிர்த்தபி னவனேநா னானேனே. (௭)

பண்டைநான் முகனூரும் பார்தால் லுலகமுங்
கண்டவை நரகென்று கழிக்தவர்க் கருள்செய்தான்
விண்டலர் பொழில்சூழும் விரையந் தணனுய்வாந்
தண்டமு நீயென்ன வவனேநா னேனேனே. (அ)
ஓராமை யேமூல முலகுக்கென் றுணராதே
பேராசை யுள்புக்குப் பிரமித்துத் திரிவேனை
வாராயென் றருள்செய்து மறைசொன்ன பிரமமு
மாராயி னீயென்ன வவனேநா னேனேனே. (கூ)
அடியொடு முடிவினை யாராயி னிலையாகுங்
குடியொடு பதிகுலங் கோத்திர சூத்திரச்
செடியினை யுறுத்திட்ட சிபுரு டோத்தம
னடியினை சேர்ந்தபின் னவனேநா னேனேனே. (க0)
போதுக்கு மொளியான பூமாற் சோதிதன்
பாதத்தே பணிமாறத் தொடுத்தசொற் றொடைபத்துங்
கோதற்ற மனத்தார்கள் குருபர னருளாலே
வாதற்ற பிரமமே வடிவாகி யிருப்பாரே. (கக)

அவனேநான் முற்றுப்பெற்றது.



தொண்ணூற்றுராவது
அவித்தியாப்பிரலாபம்.



எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அறிவென்றே ராண்மகனுரைவையறி யாதே [குந்தே
யவிச்சையெனும் பேதையேனு மவர்க்குமுன்னம்பு

னித்தலையி லுறவறுத்தா னிளையவளைக் கொண்டே
யிதுவுமென்றன் விதிவசமோ வென்றிருந்தேன்சிலநா
ளத்தலையி லுறவினையு மப்படியே யறுத்தா
ஞண்டிசெய்தவபுருதன்னையார்க்குச்சொல்லுவேனுன்
ஞெருத்தறுத்துச் சோதிவடிவாக்குவாரே பெண்ணே
சோதிக்குளே நாமும்புகத் துரியமில்லை காணே. (எ)

சாக்கியாகி யவரங்நுன் சவியாகே யிருக்கச், சக மனைத்துஞ் சந்திக்கே சாய்ச்சுகொடே போந்தேன், பாக்கியமில் லாமையாலே பயல்களையும் பாரான், பசித்தாலும் பரிக்கம்பண்ணைப் பார்த்துக்கொடேயி ருப்பன், வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத நிலத் தே, மறையவளைக் கொடுக்கே வைச்சுக்கொடே யிரு ப்ப, ஞக்கினுரே யழிப்பாராளைற் றடுக்கலாமோவாண் டே, யடையக்குலநசிப்பதிங்ஙன மிந்தோமேயாண்டே.

அன்றிவன் வசத்தினொடு சத்துமலவாகி
யாண்மகனுர் வெறுத்தவன்றே யதிருபதி யானே
னின்றெனக்குச் சனித்தனவு மிப்படியே யானு
லேந்திழையீ ரொன்சொலுவே னிந்தக்கேடு தனக்கு
வொன்றிடினுலகுதனி லொருத்தியைப்போலிருப்ப
ரோருபாயங் காணேனு ணர்வுபுக்க பின்னை
யென்றுமினி யவளைப்பார்த் திடுவர்காணு மாண்டே
யென்னைக்கடைக்கண்ணாலும் பாரார்காணுமாண்டே.

அச்சட்டையா னன்னமேறி யகிலமாக வென்றிட்
டன்புடைய குணத்தினாலே யகிலமெலாம் படைத்தா

ஞச்சட்டையாற் புள்ளையேறி யுலகமெலாங் காக்கு
மொளியுடைய குணத்தினாலே யுவமையிலி யானான்
மச்சட்டையா லெருத்தையேறி யுலகமெலா மாள
மாயக்குணந் தானான வள்ளலெனைப் பாரா [டே
னைச்சட்டையா லுணர்வுதோன்றியுண்மையானானாண்
யோமுமிட்டுத்துரியமாகவுணர்ந்தார்காணுமாண்டே.

அவித்தியாப்பிரலாப முற்றுப்பெற்றது.

---

## தொண்ணூற்றேழாவது
## * பாண்டியுரைவாரம்.

சூடன்வெஃசெந்துறை.

ஏற்றப் பானைபோ லிவ்வுடலை யென்று மென்று
நீரிற்றோய்த்தக்கானும், பேர்த்துப் பேர்த்துமிது வாத்
தையன்றோபேத மறுத்திட வற்றோ சொல்லீர். (௧)

அல்லை லுடலைக் கழித்து அறிவே வடிவென்
றுணர்ந்திருப் பார்க்குச், சொல்லக்கடவதொன்றுண்
டோசுருதிகடேற்றி யளவிறந்தத்தை. (௨)

கானலை நீரென் றுணர்ந்து கரையுந் திரையு
நுரையுங்கண் டாற்போற், றானல்லா வூனைத்தா னாக்
கிச் சாத்திர கோத்திரஞ் சாற்றுகின்றீரே. (௩)

* பாண்டியுரைவாரமென்பது-பாண்டித்தியவுரையாம்.

புக்தி விகற்பத்தை விட்டுப் போதம் வடிவென்
றுணர்ந்திருப் பார்க்கு, மித்தனை கூத்தாடல் வேண்
டுமோ விரவியுதித்தா லிருள்போ மிடத்து. (௪)

பரிதி யொருவ னுதிக்கப் பலகோடி யண்டங்
கள் பேதமா னாற்போற், சுருதி முடிவி னுதிக்கச்
சொல்லும் பொருளுந் துலங்கிடுங் காணே. (௫)

பாத்திர பேதத்தி னாலே பலகோடி யிரவிகள்
பேதமா னாற்போ, னேத்திர மான பிரம நிகரிற் ப்ர
பஞ்சமு மாயுதித்தானே. (௬)

மதியைக் குறிப்ப திலக்காய் மாமரத் துச்சியைக்
காட்டினாற்போற், பதியைக் குறிப்பதி லக்காய்ப்பஞ்
சகோ சச்சட்டை சாத்தி னாரே. (௭)

செகத்தெங்கு நிறைந்தவச் சிவனார்தம்மைச் சிந்
தைதலன் றித் தெரிவு றார்காண், முகத்தைமுகத்தாலே
காணலாமோ முன்கையிற் கண்ணாடி காணுறிய. (௮)

ஊனிலே யொன்பது வாசல்விட்டங் கொருவ
னைக்காவலிருத்தி வைத்தவ், வூனிலொருவனும்போன
வாறே யொன்பது வாசலு நாய்புகுங் காணே. (௯)

ஓங்குமுடியைத் தலையில்வைக்க வுலகமெல் லாமர
சாளு மாப்போ, லாங்காரந் தனையறி வோடேகூட்ட
வகிலமு நாமா யிருக்க லாமே. (௧௦)

நெஞ்சிலே கட்டை யடுக்கவிட்டு நீட்டி நிமிர்ந்து
கிடப்ப தன்முன், னஞ்சையு முள்ளேயடக்கிக்கொண்
டேயானந்த மாயறி வாகவல் லீரே. (௧௧)

அம்மையு மப்பனுங் கண்டிருக்க வந்தகளுருயிர் கொள்வதன் முன்ன, மும்மையு மூனையும் வேறதாக வுள்ள பொழுதே யுணரவல் லீரே. (௧௨)

மக்களுஞ் சுற்ற மனைவிசுத்த மாயவுடலெரிகொள் வதன் முன்ன, நிட்கள மான வறிவுதன்னை நும்வடி வாக நினையவல் லீரே. (௧௩)

இருவினைப் பாசங் கழுத்தினிலிட் டேற விறங்க விழிப்பதன் முன்னங், குருவினைச் சென்று பணிவீரா கிற் சோதிலெறிவோடே கூட லாமே. (௧௪)

போத வடிவுதனை மறந்து பூமிக்கே வந்து பிறந் தவாறே,*தாதா தவசியென் றேசிச் சங்கேதித் துத் தம் வடிவிழந்தாரே. (௧௫)

தன்மய மான வுணர்வயர்த்துத் தரணியில் வந் துபிறந்தவாறே, பெண்மக ளொரென் றெடுத்துக்கொள் ளயாளுன் மகனென் றிசைந்திருந் தாரே. (௧௬)

தனையு மிரண்டுள தண்டொன்றத்தைத் தாமே யிடுவாருந் தாங்கு வாருங், கனையும் படியறி யாமை யாலே சாவித் திருந்தவா கண்டுகொள் ளீரே. (௧௭)

வானதி பூதங்க ளோற்றுகைக்கும் வான்கருத் தும்புலன் ளொற்றுகைக்கு, மூனதி பேதங்களோற்று கைக்கு முண்மையு மாயுணர் வாயிருந்தானே. (௧௮)

போது புலர்ந்து புகுந்தனையும் புத்தியை யென் கேனும் போக விட்டுத், தூதுவர் வந்துபுகுந்தவாறே துடைகள் பறக்கத் தொடங்கி னாரே. (௧௯)

கொத்து முதலியொருவ னுள்ளனவன் கொள் வதுமில்லைக் கொடுப்பதுமில்லைப், பத்துக் கூலிபத் துச்சே வகருமவன்பார்வையா லேபறை யாயினரே.

கொல்லும் புலிபோ லுயிர்பருகுங் கூற்றத்தின் வாயிற் குறுகி டாதே, சொல்லு மனமு மிறந்துநின்ற சோதிநா மென்று சுகிக்கவல் லீரே. (உக)

பாண்டியுரைவார முற்றுப்பெற்றது.

---

## தொண்ணூற்றெட்டாவது
## பார்ப்பானும் பறைச்சியும்.

குறள்வெண்செந்துறை.

அன்னமய மீதுடம்பே யறிவானந்த போதமே யெங்கு, மென்னேபிராமணனீரே யேறப்போவென் குதிங்காரை. (க)

சோதியாய் நின்றநிங்கொன்று சொல்லுமுடம் பிதுசோறு, சாதியாய் நின்றநிங்கேது சாயப்போ வென்குதிங்காரை. (உ)

பூண்டவுடம்பிதுபூதம் பரிபூரணமானதுபோத, மாண்டே பிராமண னீரே யகலப்போவென் குதிங் காரை. (௩)

சுக்கிலஞ்சோணிதமன்றித் தோற்றுங் குலமுண் டோசொல்வீ, ரெக்குலநல்லதென்றே யேறப்போ வென்குதிங்காரை. (௪)

இறைச்சியெனும் புதோலன்றி யெனக்குமுனக்
கும் வேறுண்டோ, பறைச்சிபோ லென்றுண்டாய்
பார்ப்பான்பண்டேநீபேய்கொண்டாயாதே. (௫)

இருவரு மொருவழி போகச்சே யெறப்பாராய்ப்
பார்ப்பானெனைவிலகென்று, னிருவர்விலங்கி லும்வழி
விலங்கா தென்றேனெத்தாலென்றானுமத்தாலென்
றேன். (௬)

உடலுக்குடல் பொய்யல்லவொன்றே யுண்ணின்
றசோதி விலங்கவொன்றே, வடலைப்பிராமணனீரே
யகலப்போவென்றுதிங்காரை. (௭)

பார்ப்பானும் பறைச்சியும் முற்றுப்பெற்றது.

---

தொண்ணூற்றொன்பதாவது

## பறைச்சியும் பறையனும்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பரமானு மதுவுண்டு பரவசமைம்படி
பாதங்க டலைந்தா ராரேடா பறையா
வரமான குணமூன்று மழியவே யருள்செய்த
வானந்த நாடெனன் றறியாயோ பறைச்சி (௧)

மெய்ஞ்ஞான மதுவுண்டு மெய்ம்மறந் திருக்கவே
மேலான பதங்கந்தா ராரேடா பறையா
வஞ்ஞான மழியவே யறிவினை யருள்செய்த
வானந்த நாடெனன் றறியாயோ பறைச்சி. (௨)

எண்ணிறந்த நரம்புகளு மிறைச்சிகளு முடைய
இந்திரியப் பொந்திரிய வழித்தாரார் பறையா
கண்ணெதிரே யெழுந்தருளிக்கலியுகத்தி னெடுத்துக்
கரையேற விட்டாரென் றறியாயோ பறைச்சி. (௩)

ஏற்றத்தாழ் வின்றி வரம் பொன்றுங் காணுமே
யெங்கும் போதவெள்ள மானானேன் பறையா
வாற்றைத் தலையிலே தேக்கினான் காலிலே
யடைய வொதுக்கினேன் காணேடி பறைச்சி. (௪)

சோதியந் திரமுண்டு சுகியாமே சுகிக்கின்ற
வாதியந் திரந்தந்தா ராரோடா பறையா
வாதியந் தமுமில்லா வறிவானந் தத்தேவர்
பாதமென் றலைதந்த தறியாயோ பறைச்சி. (௫)

தன்னைத்தா னறியாத சாதியை மிகவுண்ணத்
தாளிணை தலைமிசை தந்தாரார் பறையா
பன்னத்தால் வருந்தேகாச மறிவன் றென்றிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௬)

தருமறை யும்படி திருமந் திரமுண்டு
தனிக்கவே பதந்தந்தா ராரோடா பறையா
வருமறை முடிவிலு மறியவொண் ணாதிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௭)

ஊனைக் கழித்துண்மை யாமந் திரமுண்ண
வுபதேசந் தந்தவ ராரோடா பறையா
வானைக் கருள்செய்ய வன்றுவந் துதவிய
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௮)

இருவினை யானது வேரறப் பார்த்துன்னை
யிப்பிறப் பறுத்தவ ராரோடா பறையா
சுருதிக டேடியு மறியவொண் ணாதவத்
துய்யநற் சோதியார் காணேடி பறைச்சி. (௯)

அன்றான வறிவுநந் தறியாமை தனைப்போக்கி
யகம்பிரம முனக்களித்தா ராரோடா பறையா
குன்றாத மெய்ஞ்ஞான நன்றாக வருள்செய்யுங்
கோதில்சுக வப்பனென் றறியாயோ பறைச்சி. (௰)

சாதிகுல பேதமறச் சங்கை யறத்தெரிந்து
சந்தான வுபதேசந் தந்தாரார் பறையா
நீதியிலு ணர்வேயாய் நித்தசுத்த மாகிய
நின்மலனு மப்பனென் றறியாயோ பறைச்சி. (௧௧)

குன்றாத மெய்ஞ்ஞானக்கொணர்ந்தெனக்கருள்செய்தி
கொன்றான வுண்மையை யுரைத்தாரார் பறையா [ங்
சென்றார்தம் போதத்தைத் தெளிவுறக் கண்டிடி
லன்றாயு மவனென்றிட் டறியாயோ பறைச்சி. (௧௨)

பறைச்சியும் பறையனும் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## ௧00-வது சாற்றுபறை.

### இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொன்னையொழி யச் * சவடி காறையிலை யாற்போற்
புவனங்கள் பதினாலு மிருக்கபடி பார்க்கி
லென்னையொழி யப்புவன மேதுமில்லை யென்றிட்
டிரவுபக லனவரத மறையுமேடா பறையை. (௧)
ஆங்கார வன்னியறை யரசழியப் பொருதிட்
டவருடைய வைமந்தரையு மறவச் சிறைவைத்து
வோங்கார வடிவான துண்மையதே யென்றிட்
டுருகுதொறு மோயாதே யறையுமேடா பறையை. ( )
இயமமென நியமமென விரட்டைமதி விட்டு
விதயபுண்ட ரீகமெனு மில்லதனுக் குள்ளே
யயனைமுத லமரரெலா மடிகள்பணிந் தேற்ற
வறிவுகிடை ராசரசென் றறையுமேடா பறையை. (௩)
ஊனைவடி வாகவுண ரும்மதியை விட்டு
வுண்மையுண ரும்மதியை யுள்ளுறவே நிறுத்தி
ஞானவடி வானவனே நானவனே யென்று
நாடோறு நாடோறு மறையுமேடா பறையை. (௪)
ஏதுமலா வறிவதனன் யான்மறையோ னென்றிட்
டெருதுபோலே யாகாதி கன்மதன்ம மெடுத்துப்
பேதமெனும் படுகுழியில் விழுந்துபல பிதற்றும்
பித்தினையு மறுக்கோமென் றறையுமேடா பறையை.

* சவடி இத்தேசத்தில் சவளியென வழங்குகின்றது.

எடுப்பதொன்று மிடுவதொன்று மன்றுகிடீர் பிரம, மேழைச்சன முமூன்றனுக்கு மாயத்தானம் போலே, கொடுப்பதொன்றுங் கொள்வதொன்று மன்றுகிடீர் பிரமங், கோதிலறி வானதென் றறையுமடா பறையை. (௯)

அறிவான வடிவுதனை யறியாமை மறைத்திட்
டகமனித னென்றிடுமவ் வவமானங் கழிய
நெறியான வறிவுதரு நின்மலனா ரருளா
லித்தசுத்த மானோமென் றறையுமேடா பறையை.()
வானாதி பூதமெல்லா மாயையாலே வளர்த்து
வடிவுதொறு மறிவாகி வளர்வுகுறை வின்றித்
தானேயா யுலகனைத்துந் தன்னிலே றில்லைத்
தான்சேரா னுலகமென்று சாற்றுமேடா பறையை.()
பொய்யாய மாயையினைப் புவனமுழு தாக்கிப்
புத்தியெனு மந்திரிதனோடுபுவி யாள
மெய்யாய வறிவுகிடீ ரரசாள்வ தென்று
வீதிதொறும் விளங்கிடவே யறையுமேடா பறையை.

புகழிலங்கு மறிவானும் பூமர்சோதி யருளாற், புவனங்கள் பதினாலும் பொய்யெனவே யுணர்ந்து, துகளின்மறைத் தமிழ்மாலைப் பத்தினையுந் தொடுத்துத், தோளின்மிகச் சாத்தினோமென் றறையு * மேடா பறையை. (௧௦)

சாற்றுபறை முற்றுப்பெற்றது.

---

* எடர்களென்பது - எடாவென பன்மையொருமை யாய் வந்தவழுவமைதி.

சிவமயம்.

## ௧௦௧-வது திருவுந்தியார்.



### கலித்தாழிசை.

அஞ்ஞான காரிய மனைத்தையு மறவிட்டு
விஞ்ஞான மானேனென் றுந்தீபற
வெளியாகி நின்றேனென் றுந்தீபற. (௧)
முடியாத பிறவிகள் முடிந்திட மாயையைத்
துடியாம லறுத்தோமென் றுந்தீபற
துரிசற்று நின்றேனென் றுந்தீபற. (௨)
போதத்தை யுணராதே பொல்லாத மாயையாற்
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற
பேதமும் பிரமமென் றுந்தீபற. (௩)
முன்செய் தவத்திலே முயன்றவப் பெருமையாற்
பின்சாதி கழிந்தோமென் றுந்தீபற
பிரமமே யானேனென் றுந்தீபற. (௪)
அதுவேகா ணீதுவென்றென் றாரியனருள்செய்ய
விதுவது வாகுமென் றுந்தீபற
விலக்கணை புகுந்ததென் றுந்தீபற. (௫)
தொம்பதந் தனிலுள்ள துகளினை யறுத்தக்காற்
றம்பத மறிவேயென் றுந்தீபற
தாக்கற்று நின்றேனென் றுந்தீபற. (௬)
தற்பதந் தன்னிலுஞ் சபளத்தைக் கழித்தக்கா
னிற்பது போதமென் றுந்தீபற
நீக்கியொன் றில்லையென் றுந்தீபற. (௭)

அசிபதந் தனக்குள்ளே யவனேகா ணிவனென்ன
வசிவத்தொன் றுணேமென் றுந்தீபற
வொழிவற நிறைந்தெனென் றுந்தீபற. (அ)

பாக்கியத் தாலேநாம் பழமறை மொழிந்திட்ட
வாக்கியங் கேட்டோமென் றுந்தீபற
வரவுபோக் கற்றோமென் றுந்தீபற. (௯)

அக்கண மறிவாக வடியிணை தருவார்க்குத்
தெக்கணை காணேமென் றுந்தீபற
செய்வதொன் றில்லையென் றுந்தீபற. (௧௦)

* உந்தீ பறபெண்கா ளுந்தீபற
வுணர்வேநா மாணேமென் றுந்தீபற

திருவுந்தியார் முற்றுப்பெற்றது.

---

## ௧௦௨-வது அநுபவமாலை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொங்கு ானல் புனலாய வண்ணமும்
போத மேபேத மாகி யதுபுரிந்
தெங்கு நாமறி வாகி யிருந்ததா
லீதென் றீதென் றனலாவ துண்டோ. (௧)

---

* உந்தீபறபெண்காளென்பது - ஒருமை பன்மையாய் வந்தவழுவமைதி.

சமய மாறுக்குஞ் சத்தா மொளியதாய்ச்
சாக்கி யாகி யிருந்த விடத்திலே
யமையு மாசை யவற்றிற் பிதற்றைவிட்
டாறி னுருக் கலைந்தலை தானுண்டோ. (உ)

அஞ்சு கோச வரணை யழித்திட்டு
வானந்த வறி வாகிய வாசையும்
வஞ்ச மாகு மதுவிட்டு வாழ்வார்க்கு
ம்மாய வாழ்வை மதிப்ப தினியுண்டோ. (௩)

கலவி யென்பதோர் கட்டை யறுத்துக்
காமன் வாழுங் கருக்குழித் தூர்த்தே
யலையிலா வுணர் வாயிட் டிருந்தா
லமரர் வாழ்பதி யிற்புக வுண்டோ. (௪)

காம கோபப் பெரும்புலி வாழுங்
கன்ம காண்ட மெனுங்காடு வெட்டி
யோமெ னும்பொரு டன்னை யுணர்ந்தே
யுண்மை யானோர்க் கொருகுறை யுண்டோ. (௫)

தோற்று மாயத் துவக்கை யறுத்துத்
தூய்ய போதச் சுகத்தினை யுண்டு
காற்றி லாவிடங் கண்டிட் டிருந்தாற்
கற்ப னையின் கருத்தழி யாதோ. (௬)

வான ழிந்து மகானு மழிந்துபின்
மாயை தானு மழிந்து வழக்கற
நான ழிந்துபின் னனது வானு
னு னென்பதோர் நாசந்தா னுண்டோ. (௭)

சுருதி யந்தமாஞ் சுத்த சுகத்தைச்
சோம்பை விட்டுச் செவியாரக் கேட்டு
மிருதி யாற்றெளி வாக வுணர்ந்தான்
மீண்டுபோ தென்னும் வேதனை யுண்டோ. (௮)

எரியின் முன்னவ நீத மதுபோ
லெல்லா மேகபோ கத்தி லுருக்கிச்
சரிவி லாதசச் சித்தா யிருந்தாற்
றுமியா மென்னுந் தங்குத லுண்டோ. (௯)

போக்கி னோடு வரவு மிறந்து
பூரண போதம தாகிப் பொலிந்து
வாக்கி னோடு மனமு மிறந்தால்
வாசகஞ் செய்ய லாவதொன் றுண்டோ. (௧௦)

அனுபவ மாலை யையி ரண்டையு
மத்தன் பூமனாற் சோதிதான் சாத்தி
யனு பவவழி மாள வுரைத்த
வொப்பி லாதார்க் கொருகுறை யுண்டோ. (௧௧)

அனுபவமாலை முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

## கoக-வது அறிவு.



இரட்டைக்குறள் வெண்செந்துறை.

போகாத வாயையைப் போக்கிட லாவதும்
புண்ணிய பாவம் புறத்திட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (க)

என்னிலே யாவையுங் கண்டிட லாவதும்
யாவையு மென்னையுங் கண்டிட லாவது
மன்னியங் கண்டிலோ மென்றிட லாவது,
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (உ)

மோகாதி யெல்லா முறிந்திட லாவது
முற்றுமுற் கன்மங்க ளற்றிட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (ங)

இந்தப் பிறப்பினின் றேறிட லாவது
மேகாந்த மாகி யிருந்திட லாவது
மந்தக் கரண மறுத்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (ச)

நற்செய் தவங்களு மற்றிட லாவது
நானெனு மாங்கார நச்சற லாவது
மற்சனை யெல்லா மறவிட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (ரு)

அறிவு முற்றுப்பெற்றது.

சிவமயம்.

# கഠசு-வது * தச்சராண்டு.



## இரட்டைநூல் வேலீசெந்துறை.

என்னை யறியா வறியாமை போயிட
வேகமா யின்ப மெனக்கே யருள்செய்து
பின்ன மில்லாத பிரமநீ யென்றிடப்
பேச்சற்ற மெய்ப்பொரு ளானேமே யப்பா. (க)
கண்ட கருக்குழி மாளும் படிக்குக்
கருணையி னாற்கலந் தாண்டு கொண்டு
பண்டை வடிவது நீயானை யென்றிட்டுப்
பார்க்கப் பரமா யிருந்தோமே யப்பா. (உ)
கருதும் பொருளிவை யெல்லா மெல்லாங்
கானலி னீரென்று சொல்லிச் சொல்லி
யொருவ னுணர்த்த வுணர்ந்தங் குணர்ந்தவ்
வொப்பற்ற மெய்ப்பொரு ளானேமே யப்பா. (ங)
தப்பா மறைப்பொரு டன்னை முன்னைத்
தானே யெனக்குத் தலைவ னளித்திட
வொப்போத லில்லா வுணர்வோடு னைபின்
னென்றிய மெய்ப்பொரு ளானேமே யப்பா. (ச)
பேதப் பிணக்கற வெண்ணி யெண்ணிப்
பேராத துன்பப் பிறவி யறுத்திடும்
போதப் பொருளே யுணர்த்த வுணர்த்தப்
பொய்யிலா மெய்ப்பொரு ளானேமே யப்பா. (ரு)

---

* தச்சராண்டென்பதோர் கூட்டம்.

தேடுந் தனமுந் திடமாம் பிராணனுங்
  கூடு முடலுங் குருபர னுக்கென்று
பாடு மறையின் படிபரன் கைக்கொள்ள
  நீடும் பரமாகி நின்றோமே யப்பா. (௬)

தோற்று முலகமை யெல்லா மெல்லாந்
  தோற்று திருக்குஞ் சகமேவடி வென்னப்
பேற்று முறையுங் கடந்து நடந்த
  பிரமமே நாமா யிருந்தோமே யப்பா. (௭)

அத்தி கிரியிலு மன்ப ரறிவிலு
  மாதி யருளாளர் தாமா யிருக்கவே
யெத்திசைக் கேதெய்வ முண்டென்று சொல்லிடு
  மேழையர் தங்காக கொள்ளோமே யப்பா. (௮)

அண்ட மனைத்துமாய் நின்ற பரனாந்த
  மாகம வாக்கியந் தன்னை யுணராதே
பிண்ட மதனையே நானென்று பேசிடும்
  பேதையர் தங்காக கொள்ளோமே யப்பா. (௯)

கூடும் பரனுங் குருபரன் பாதமே
  நீடு மடியவர் நெஞ்சத்து னின்றிடத்
தேடுந் தனமுஞ் செகமுந்தான் மெய்யென்று
  நாடு மவர்காக கொள்ளோமே யப்பா. (௧0)

**தச்சராஷ்டு முற்றுப்பெற்றது.**

---

சிவமயம்.

# க௦௫-வது பாம்பாட்டு.

குறள்வெண்செந்துறை.

ஆதியு மந்தமு மேது மில்லா வறி
வானந்தத் தேவ ராணை யாணை
சோதியுட் சோதிநா மானோ மென்று
சுருதிகள் பாடநின் றாடாய் பாம்பே. (௧)

சுருதியுங் கருதிடாச் சுகமேகா ணீயென்று
சொல்லாதே சொன்னவ ராணை யாணை
கருதிய வுலகினிற் கற்பனைக ளெல்லாங்
காணலி னீரென்றே யாடாய் பாம்பே. (௨)

ஆங்கார மோகங்க டாமே கழிய
வடியிணை சூட்டினா ராணை யாணை
யோங்காரத் துட்பொரு ளாகி நின்ற
வுண்மைநா மானோமென் றாடாய் பாம்பே. (௩)

நாரிய ரென்னும் வலையிற் பட்டு
நானென தென்னு நகுவ றீர
வாரியன் வந்தடி வைத்த போதே
யானந்த மானோமென் றாடாய் பாம்பே. (௪)

மனமுத லான கரண மெல்லா
மாய வருள்செய்தா ராணையாணை
நனவிலுங் கனவிலுஞ் சுழுத்தி யிலு
நானேதா னானேனென் றாடாய் பாம்பே. (௫)

பேச்சு முறையும் பிறவு மறுத்தென்னைத்
தோய்ச்சு மொளியிலே தோய்ச்சாமெய் செய்தானே.

விதியாலே காடேறி விறகோடே போவேனைப்
புதியானொ ராண்பிள்ளை போகாய்வாரா யென்றான்.()

கரியாமுடம்போடே கடைகொள்ளப் போவேனைப், பெரியானொ ராண்பிள்ளை பிறவாதெல்லாஞ் சொன்னான். (கo)

வின்ளேன் வின்ளேனென்று வேண்டிற்றெல்லாஞ்சொல்லி, புள்ளே கொடுப்புக் குடம்பைக் கழித்தானே. (கக)

கருதி யிருக்கினுங் கண்ணுக்கெட் டாப்பையல்
சுருதி முடிவிலே தோன்றினா னென்செய்வேன்.(கஉ)

ஆரணந் தேடற் கரியா னொருபையல்
காரண நீயென்னக் காலாலே பாய்ந்தானே. (கங)

மருவ வடிவில்லான் மானமில் லாப்பைய
லொருவன் கிடீரென்னை யுள்ள மழித்தானே. (கச)

முன்னில்லைப் பின்னில்லை மூலமில் லாப்பைய, லென்னில்லைத் தன்னில்லை யென்றானொ னென்செய்வேன். (கரு)

சோதித்துப் பார்க்கிலேன் சுருதிக ளேற்றிலேன்
பேதிக்கப் போகாத பிரமநா மானேமே. (கசா)

இட்டிடத் தூண்கிலெ னேதேனுஞ் செய்கிலே
னெட்டொன்று மில்லாத வுணர்வுநா மானேமே. ()

ஓட்டிலே பிச்சையேற் றுண்பா னொருபையல்
வீட்டிலுங் கொண்டுபோய் வெளியிலே விட்டானே.
பண்டில்லை மேலில்லைப் பாரீரிப் பையலார்
பெண்டிரோ டென்றும் பிரியா வுணர்வென்னே. (௧௯)
கண்டதுங் கேட்டதுங் காணாத போதிலு
முண்டதுங் கொண்டது முனக்குண்டோ வென்றானே.
பொறியுற் றிருக்கிலென் புலனைச் செயிக்கிலெ
னறிவைப் பிரியாத வானந்த மல்லலேறே. (௨௧)
நெஞ்சிலே நெஞ்சிலே நிற்பா னொருபைய
லஞ்ச மறுத்தறி வாக்கினா னென்செய்வேன். (௨௨)
கருவை யிறுக்கிலேன் கழலிணை சூட்டிலே
னுருவை யில்லாப்பைய லுறக்க றவிர்த்தானே. (௨௩)
தன்னை யிகந்து தனியே யிருப்பானை
யென்னெனச் சென்றுநா னென்னை யிகந்தேனே. ()
நாட்டார்தா மென்செய்வார் நமனார்தா மென்செய்வார்
வீட்டார்தா மென்செய்வார் வீணே திரிவாரை. (௨௫)
அஞ்சுவ தில்லை யடங்கு வதுமில்லைத்
தஞ்சமில் லாப்பைய ரொன்றொன்றி யானானே. (௨௬)
உள்ளத்தி லுள்ளே யுதிப்பா னொரு * பையல்
வள்ளலைக் கண்டுநான் வரவுபோக் கற்றேனே. (௨௭)
ஏகமில் லாப்பைய னென்னையுந் தானாகப்
போத வுணர்த்திப் புகலு மறுத்தானே. (௨௮)

* பையல்-சிறுவன்.

காமே கலமாகக் கண்டிட மிரந்துண்டு
பரமே பரமாகப் பற்றறப் பெற்றேமே. (உகூ)

அடியின்றி முடிவின்றி நடுவு மின்றி
யாகாசந் தானின்றி யங்கு னேயாய்
வடிவின்றி நின்றதோர் வடிவு தன்னை
மறைகளெல் லோதேடி மயங்கு கின்னும். (௩௰)

நையாண்டி முற்றுப்பெற்றது.

## கoஎ-வது மனம்.

இரட்டைதூறள் வெண்செந்துறை.

சோராய் மனமேநீ சிற்பரத்தோடே நஞ்சிவனே,
யோராமையல்ல துணர்விற் பிறிதொன்றுங் கண்டி
லேனே. (க)

சொல்லாய் மனமேநீ சொல்லா திருப்பதென்
சொல்லற்றேறு, வெல்லாம் பிரமமாய் நின்றபினே
தென்று சொல்லுவேன். (உ)

சுற்ற னினைத்தல் கருதுதல் செய்யாய் மனமேநீ
சுற்று மகத்துஞ் சுகங்கா ணினிப்பல சொல்லியென்.
பண்டுபோ லன்றிப் பதைப்பற்றிருந்தாய் மனமேநீ
கண்டதனைத்து மறிவாகக் காணுதே கண்டோநீ. (ஈ)

ஐயோ மனமேநீ யாராயமாட்டா திருப்பதென்
பொய்யோ முடிந்தது பூரணபோதமே யாறேமே. ()

என்னே மனமேநீ யேவிற்றுச்செய்யா திருப்பதென்
முன்னே கருமத்தின் மூலவவிச்சை முடிந்ததே தா. (சா)

கோத்தாம வித்தையின் கொத்தக் குலையாய்
மனமேநீ, பார்த்தா லனைத்தும் பழுதையிற் பாம்பாய்
முடிந்ததே. (எ)

அன்னையை முன்ன மறிவாலறப்பறித் தாட்
டினே, னென்னையு பின்னையிலாமை நிலையிட்டாலென்
செய்வேன். (அ)

கரண மனைத்தையுங் கையொக்கப்பாராய் மன
மேநீ, புரணமே யெங்கும் புலனுக்குப் போக்கிடங்
கண்டிலேனே. (கூ)

போகாய் மனமேநீ போகாதிருப்பதென் போக்
கற்றே, வாகா விவர்சொல்லும் வார்த்தையே யெங்
குமறிவுன்றே. (க0)

கலைச ளனைத்தையுங் கற்கிலைகண்டாய் மனமேநீ,
யுலைநீர்போல் வெந்துனக் குள்ளேந டாவொளி
யானேனே. (கக)

மன முற்றுப்பெற்றது.

---

மாங்கூடிடுக்கிட மாசாகந் தீண்டிற்றென்
றேங்கா விறந்தானென் றிம்பிலடி
யெல்லா மிப்படியேயென் றிம்பிலடி. (எ)

ஆரியன் வந்திங் கடிதலை வைத்தபின்
பூரண மானதென் றிம்பிலடி
போக்குவர வில்லையென் றிம்பிலடி. (அ)

பன்னு மறையின் படியே பரனைத்
தன்னை யுணர்ந்தோமென் றிம்பிலடி
தத்துவந் தானேயென் றிம்பிலடி. (கூ)

இம்பில் முற்றுப்பெற்றது.

---

## ககo-வது பந்து.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஒன்றாகி நின்றபே ருணர்வே யுணர்ந்திட்
டோமென்னுங் கரத்திற் பந்தாடா நின்றேன்
பின்றாதே யென்னோடே பிழைப்பாயோ பந்தே
பேய்த்தேரி னீருண்ணப் போவாயோ பந்தே. (க)

பத்தியே வளர்கோலப் பட்டினை யுடுத்துப்
பழுவினை சரிதையாற் பந்தாடா நின்றேன்
முத்தியே வடிவாகி நிற்பாயோ பந்தே
முட்பூவிற் றேனுண்ண முயல்வாயோ பந்தே. (உ)

வாகாதி தொங்கலை வாவலித் துடுத்து
மதனன்றன் வழிமாறப் பந்தாடா நின்றேன்
போகாதி யனைத்தையு மொழிவாயோ பந்தே
புரியி லாவாகிப் போவாயோ பந்தே. (௩)

சுருதிகன் முலைமாதர் கோழிமா ராகச்
சொல்லொணு நிலத்திலே பந்தாடா நின்றேன்
திருகின்மை யாலறி வாவாயோ பந்தே
தெளிவின்மை யாற்பிறந் திறப்பாயோ பந்தே. (௪)

உலகங்கள் பதினு லு மொருகாலா லடக்கி
யுணர்வேமுக் காலாகிப் பந்தாடா நின்றே
னலகில்லா வறிவுரு வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மாகி யலைவாயோ பந்தே. (௫)

தேசிக ஞரடி சென்னிமேல் வைத்துத்
தேச காலங்கெடப் பந்தாடா நின்றேன்
வாசியில் லாவறி வாவாயோ பந்தே
மாயா மயமாகிப் போவாயோ பந்தே. (௬)

ஆறு முகமு மடையப் புதைத்திட்
டறிவே முகமாகிப் பந்தாடா நின்றேன்
வீறும் வெறுப்பு மறுவாயோ பந்தே
விதியா ரேவற்றொழில் செய்வாயோ பந்தே. (௭)

குணக்குங் குடக்கொடு தெற்கும் வடக்குங்
கோணங் களுமாகிப் பந்தாடா நின்றே
னணுக்கவொண் ணுவறி வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மா யலைவாயோ பந்தே. (௮)

கோசமென் னுங்கழற் கற்றைக் குலையக்
குருபரன் ருள்சூடிப் பந்தாடா நின்றேன்
பாச மறுந்தறி வாவாயோ பந்தே
பார்க்கி லில்லாப்பவ மாவாயோ பந்தே. (கூ)

எல்லாம் பிரமமே யென்று மொழியாலே
யானே யானுகப் பந்தாடா நின்றே
னில்லாத வாழ்வை நினைவாயோ பந்தே
நித்த சுத்தமுத்த மாவாயோ பந்தே. (க0)

பந்து முற்றுப்பெற்றது.

நூற்றிப்பதிஞேன்றுவது
ஞானகாண்டம்-கன்மகாண்டம்.



கலிவிருத்தம்.

அந்தண னாகிவந்தா றங்கமறை யோதி
மந்தணங்கள் பேசி மடவாளை மணஞ்செய்து
செந்தழ லில்விட்டுத் தேவரோ டிருக்கின்ற
நந்தறி வாருண்டோ ஞானகாண் டத்தில், (க)

அருக்கனார் கனங்கடோறு மநேகரா யிருந்தாற்போ
லொருத்தனை யுணராமை யாலுல கேழுமாய்ப்
பொருத்தற வுடல்கடோறும்புரைவறப்புகுந்துநின்ற
கருத்தனை யறிவாருண்டோ கன்மகாண் டத்தில். (உ)

தேடிய பொருள்கொண்டு தேவாரம் பலசெய்து
கூடிய செல்வத்தைக் குறைவற விருந்துண்டு
நீடிய வுலகங்க ளனைத்தினு நெடுங்கால
நாடிட விருப்பாருண்டோ ஞானகாண் டத்தில். (௩)

அளவறுத் துலகத்தை யநித்தியமென் றறிந்தபி
னிளமை கெடுவதன்மு னியமநிய மஞ்செய்து
தளவற வானந்த வனுபோக வடிவினைக்
களவறக் கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (௪)

அரசரா யவனிதன்னி லடிதொழ வரசாண்
டுரைசெய வுலகினி லொப்பாருண் டோவென்னப்
பெருசறிவ ராகிப் பிறந்துள்ள பெருமையு
நரர்சுரர் பசுவுமுண்டோ ஞானகாண் டத்தில். (௫)

பெரியதே சுகமென வருமறை பேசிட
வரியதோ ரனுபவ மகத்திலே யுதித்தபின்
மருவிய பிறவியு மாயையு மாய்வுறக்
கருவினைக் கழித்தாருண்டோ கன்மகாண் டத்தில் ()

வாடாத மலர்சாந்து மதிமுக மடந்தையர்
தேடாத வடிசிலுஞ் சென்றிடச் சேவிப்ப
வீடாசா மரம்வீச வெண்கொற்றக் குடையிட
நாடாளப் பிறந்தாருண்டோ ஞானகாண் டத்தில். ()

கோணாத மனத்தராய்க் குருபர னருளாலே
நாணாத நான்மறைத் தலைபினை நிலைகண்டு
பூணாதே யுலகினைப் புரைவறப் புகுந்திட்டுக்
காணாது கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (௮)

வானினு மண்ணினு மற்றுள வுலகினுந்
தேனினு மினியபோ கங்களைத் தெரிந்துண்டு
மேனில நிலையென்றும் விதிவேதத் துளதென்று
நானென்று மிருப்பாருண்டோ ஞானகாண் டத்தில்.

செய்தவப் பயனெல்லாஞ் சிறிதென்று சிலதள்ளி
மொய்தவத் திறமே முத்திக்கே முயன்றிட்டு
மெய்தவத் தினைக்கண்டு வேதாந்தத் திருப்பார்கள்
கைதவ மல்லா துண்டோ கன்மகாண் டத்தில். (க0)

கொள்ளையா குதியினை யமரர்க்குக் கொடுக்கைக்கே
வெள்ளளித் தெசமாறு ரெட்டுப் பெயரோடே
சன்னென வன்னெனச் சாற்றிய சடங்கிலே
நன்னென வல்லாருண்டோ ஞானகாண் டத்தில்.(கக)

ஆரணத் துதிசெய்யு மறிவினை யகமென்று
பூரண மாகியைம் புலன்களும் புறக்கிட்டு
மாரண முமற்றைப் பிறவியு மறுத்திடுங்
காரணங் கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். ()

ஞானகாண்டங் கன்மகாண்ட முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

## கக௨-வது பாங்கிக்குரைத்தல்.



குறள்வெண்செந்துறை.

மானே பட்டது சற்றே மானே பட்டது சற்றே
மானிற் பெரியதோ ராண்பிள்ளை வந்து
தானே நானென்று போனா னவன்
றன்னையுங் கண்டிலே னென்னையுங் காணேன். (க)

பெண்ணே பட்டதுசற்றேபெண்ணேபட்டதுசற்றே
பெண்ணம் பெரியதோ ராண்பிள்ளை வந்து
கண்ணே கண்ணென்று போனா னந்தக்
கண்ணையுங் கண்டிலே னென்னையுங் காணேன். (உ)

பாங்கிக்குரைத்தல் முற்றுப்பெற்றது.



## கக௩-வது தச்சாண்டி.



இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உன்ற னிடத்திலு மூரா ரிடத்திலு
முலகம் பதினாலு முள்ள வொருபொரு
டன்றனை யீதென்று காட்டித் தந்தார்க்குச்
சமைத்துக் கழலிட்ட தச்சாண்டி யன்றோ. (க)

ஒப்பாரி தன்னு லுயிரே பிரமமென்
 றோதியே போகாமே யோர்மாத் திரைக்குள்ளே
தப்பாமே யிங்ங னிருவென் றிருத்தச்
 சமைத்துக் கழுவிட்ட தச்சாண்டி யன்றோ. (உ)

தச்சாண்டி முற்றுப்பெற்றது.

---

## ககச-வது அப்பா.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆத்ம சுருபமே மெய்த்தெய்வ மென்னு
 மாரணம் பொய்யோ வநுபூதி யில்லையோ
பார்ப்பற நீர்பனை முட்டைக் குருப்போற்
 பாஷாணம் விட்டும்மைப் பார்த்தாலோ வப்பா.()

கொள்ளைக் * கிராந்தங் குதட்டிப் பிறகுநீர்
 கோதிலா ஞானமுங் கூறியே நாணுதே
மெள்ள விருந்து சிவவேடங் கொண்டு
 விழிசிம் பிளிக்கை தவிர்ந்தாலோ வப்பா. (உ)

அப்பா முற்றுப்பெற்றது.

---

* கிராந்தம்-கிரியைமுடிவு.

சிவமயம்.

## கக௫-வது குணலை.



### இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தேவாரஞ் செய்கின்ற திண்டாட்ட மெல்லாநாந்
தீரவே தீர்ந்தோமென் றிடுகுணலை
செயலெங்கு மான திறம்பாடிப் பாடித்
தெளிவெங்கு மானதென் றிடுகுணலை
நாவார வோதிய நாமமே தங்களு
நமக்கினி யமையுமென் றிடுகுணலை
நம்மில்வே றில்லையெனுந் தன்மை யதும்போக
நாமேநா மானோமென் றிடுகுணலை. (க)

### வேறு.

உடம்புட னுறவில்லை யுணர்வே யுறவென்று
முணர் வொழிந் தில்லையென் றிடுகுணலை
யோர்வி னுணர்வேயென் றிடுகுணலை
கடம்படு மென்னுங் கதற்றுக் கழிந்தது
கலங்காது காணென் றிடுகுணலை
கதற்று மொழிந்ததென் றிடுகுணலை. (உ)

ஆசார மெல்லா மடையவிட் டங்கநா
மாறேநா மாறேமென் றிடுகுணலை
யருமறை யறியாதென் றிடுகுணலை
யாசார மானவை முழுது மறவிட்டே
யானந்த மாறேமென் றிடுகுணலை
யறிவு வடிவேயென் றிடுகுணலை. (ங)

துணலை முற்றுப்பெற்றது.

---

கககூ-வது பிடாரன்.

தூங்ஙவெள்ளசெந்துறை.

நாதச்சிலுகாக்கு நச்சரவாட்டும் பிடாரரையெல்லாம், போதச்சம்மட்டியாலே போனபோனிடமெல்லாம் போகடிப்பேன். (க)

வாக்கையடக்குவிப்பேன் மனமோடாமைமைச் சுத்திரிப்பே, னீக்கொன்றிலோடவுமொட்டே னின்மலமாக்கும்பிடாரனுனே. (உ)

அன்றுமென்றல்லல்கள் பேசியடங்கியிராதாரையெல்லா, மொன்றாக மெய்யுணர்வாலேயொக்கவிருத்தியொருக்குவேனே. (ங)

பிடாரன் முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

# ககஎ-வது அம்பட்டன்.



## இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பதைக்கவே தனைசெய்யு மலமூலப் பெரும்புண்ணைப்
   பார்வையா மயிலாலே யறுத்துன் றசையா
முதித்தவூ னினையுணர் வனவே கோலதுவா
   யுண்மையிற் றெகித்திட்ட வம்பட்டன் சீயா. (க)

உலகொடு பொருண்மைந்த ரெனுமுள்ளத்தொடுவை
   யோர்வாலே சீறியங் கொழித்துண்மை யுணரா
வஞ்பேதப் பெருவன்மக் கிரந்தியை யறிவா
   காரத்திற் கரைத்திட்ட வம்பட்டன் சீயா. (உ)

சங்கற்ப விகற்பமாங் தசையது படர்ந்து
   தன்மையாம் விழிமுடிச் சடமாகி யுதித்த
வங்கத்தை யசமென்னும் படலத்தை யுரித்து
   வறிவா விழிப்பித்த வம்பட்டன் * சீயா. (௩)

அம்பட்டன் முற்றுப்பெற்றது.



* சீயன்-பெரியோன்.

சிவமயம்.

## ககஅ-வது வண்ணன்.



எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கறையுறு முளத்தூசிற் காமாதி முழுதுங்
 கமையென்னும் பெருங்கல்லிற் கசிசறப் புடைத்து
வறையுறு மலமா மதியுவர் பிடித்து
 வைம்பூதத் தொடக்கென்று மறவாவி வைத்து
வுறைதரு பெருமாயை யொதுக்கற வொலித்து
 வொழிவற வொளிர்போதப் பிரமமே யாக
மறைமுறை கழுவிய வண்ணத்த னடியேன்
 வாசாம கோசர வண்ணத்த னடியேன். (க)

தேசுறு முளத்தூசிற் றிகழ்மையன் முழுதுஞ்
 சிதையவே யெடுத்தடித் தலம்பியங் கதனை
யாசறு சமதம மதியுவர் பிடித்து
 வகிலத்தோ டணைவொன்று மறவாவி வைத்துப்
பேசறு பெருமாயை பிறழ்வற வொலித்துப்
 பிறிதற வொளிர்போதப் பிரமமே யாக
மாசறக் கழுவிய வண்ணத்த னடியேன்
 வாசாம கோசர வண்ணத்த னடியேன். (உ)

அழுக்குறு முளத்தூசி லாகுமுக் குணமீ
 டணைமுழு தறப்புடைத் தலம்பியங் கதனை
யிழுக்கறும் விமலமா மதியுவர் பிடித்து
 யானென தென்முழு தறவாவி வைத்து

புழுக்கூடி னுளமாயை புரையற வொலித்துப்
புரணபூ ரணப்போதப் பிரமமே யாக
வழுக்கறக் கழுவிய வண்ணத்த னடியேன்
வாசாம கோசர வண்ணத்த னடியேன். (௩)

வண்ணன் முற்றுப்பெற்றது.

---

## ௧௧௯-வது முதலியார்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சட்டனென்று தலைப பறித்திடுஞ் சழக்கறுத்த முதலியார்-சாந்தமாகவே வாய்ந்த பாவனைத் தலைநி லென்ற முதலியார், கட்டறுத்தெனைக் கழலிணைதந்து கண்ணளித்த முதலியார்-காரிருளிலிரவிபோலுள்ளே கலந்துநின்ற முதலியார். (௧)

சூறைகொள்ளும் புலன்களைந்தையுந் துணிய வெட்டு முதலியார்-சுருதிசொன்னசுகவடிவாகத் துணி வுதந்த முதலியார், பாறைநெஞ்சு பதஞ்செய்யும்படி. பார்த்தருளிய முதலியார்-பத்தரெப்பினில் வைப்ப தாகிய பரிசுடைய முதலியார். (௨)

அப்புலனுமவ்வுடலுமோர்வற மொழிதந்த முத லியா-ரடியிணைதலை மிசையினில்வைத் தாண்டுகொண் டமுதலியார், செப்பரிய சிவவடிவாகத் தெளிவுதந்த முதலியார்-சிந்தையோடு மனமொன்றும்படி திருத்தி யாண்ட முதலியார். (௩)

முதலியார் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

# கஉ0-வது தவமுந் தவமுடிந்ததும்.



இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சங்கரனுகி யிமையோர் தவம்பண்ணிச் சாரச் சடை கட்டவுந்-தன்கழ றன்னிற் பணியா ருயிரெல் லாந் தானே தலை கட்டவுங், கங்குல்பகலென் றடியார் கள் வேறென்றுங் காணுமேகண் கட்டவுங்-கட்டுவீ டற்றகண் காட்டினன் வீரக் கழல் கட்டிக் காட்டி னனே. (க)

பண்டை வினையாற் பணியாதவர் தம்மைப்பாசத் தளை கட்டவும்-பணிந்தேத்தி நிற்கு மடியாரை விண் ணோர் பணியப்பட்டங் கட்டவுங், கண்டு களித்தவர் பண்டு தாங்கத்திக் கதற்றுங் கலை கட்டவுங்-கண்ணு கிய தன்னைக் காட்டினன் வீரக் கழல்கட்டிக் காட்டி னனே. (உ)

வருபிறவிக்கு மருந்தென்ற றடியாரை மாலயன் கால் கட்டவு-மனக் கணக்கிட்டு வழக்குற்றறைகின்ற வாதியர்வாய் கட்டவுங், கருதலர் செம்பொற் கதிர் மேனி யின்றன்மை காணுமேகண் கட்டவுங்-காணுது காட்டிய தம்பிரான் வீரக்கழல்கட்டிக் காட்டினனே.

தவமுந்தவமுடிந்ததும் முற்றுப்பெற்றது.



சிவமயம்.

## ௧௨௧-வது ஆண்டார்.



குறள் வெண்டாழிசை.

முன்னாண்ட வல்வினை பின்னாண்டு வாராமே
மோக்கிச மாகவே சாக்கிநானுக்கிய, வென்னாண்டா
ரென்பேனே வென்னாண்டரென்பேனே. (௧)

மூண்ட வல்வினை மாண்டுநான் வெறுமுந்தனைக
வேசித்த னுக்கிய, வாண்டாரே யென்பேனே வாண்
டரே யென்பேனே. (௨)

பூண்டமாமும்மல மாண்டுபின் னன்வெறும் பூர
ணமாகவே பொற்கழல் சூட்டிடு, வாண்டாரே யென்
பேனே வாண்டரே யென்பேனே. (௩)

ஆண்டார் முற்றுப்பெற்றது.



## ௧௨௨-வது தச்சன்.



அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அறுகம்பு னுனிப்பனியின்ற னளவில்பல் யோ
னியினூடே, பெறுதாயுதரக் குகைபாய்ச்சிப் பிறழ்ங்
கியின் மீதுவளர்த்து, மறுகாலவ் வியோனியினூடே
வளர்காயம தாயிடும் வண்ண, மறியாம வியந்திரம்
வைத்த வாசாரியை யாரறிவாரே. (௧)

கால்வைத்திரு கையதுமூட்டிக் கழியென்பு நரம்பொடிசைத்து, சாலக்குரு திப்புன லூடே தசையாமதி டன்னையமைத்துத், தோலைக்கொடு மேலதன் மேவித் தூளோதூப வியந்திரகூடஞ், சாலப்பொறிவைச் சதியக்குந் தச்சன்றனை யாரறிவாரே. (உ)

பொய்யுற்றுடல் போலொருபாவை பொறியுற்றுளபோலநடித்துச், செய்யுற்றிகமோடியரத்திற்சென்றேயுழ லத்திரிவித்துக், கைவிட்ட வியந்திரமாகக் கண்வைத்தவை கண்ணில்விழுங்குந், தெய்வத்திகழ் தச்சனவன்றன் செம்பொற்கழல் சூடவல்லீரே. (௩)

தச்சன் முற்றுப்பெற்றது.

---

## ௧௨௩-வது பாம்பாட்டி.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரகற்ற குடத்திலே பாம்படைப்போம்
வேதாந்த வெளியிலே விட்டாட்டுவோங்
கரணங்கள் பிடித்தங்கே பிரையிடுவோங்
காலங் கழியவே தப்பிடுவோம்
பரவிய மும்மல மாயையென்னும்
பாம்புதான் சீறிக் கடித்தபோது
வுரையற்ற மந்திரங் கொண்டுமீட்போ
முள்ளுளார் வாழுகின் றாடாய்பாம்பே. (௧)

சித்திர முத்தி தருமென்றெண்ணிச்
 சிந்தித்து நாளுந் திகைத்திராதே
பத்திர நிற்கவுறை குத்துமோதான்
 பார்த்தானைப் பார்த்துநின் றாடாய்பாம்பே.

ஓங்காரத் துட்புகுந் துச்சியேறி
 யொன்பது துவாரத்தி னூட்புகுந்து
தூங்காமை தூங்கிநின் றாடாய்பாம்பே
 தொந்தங் கடந்தோமென் றாடாய்பாம்பே. ()

ஆரூரு மிங்கேயம் பலமுமிங்கே
 யாடரவக் கிண்கிணிக் காலுமிங்கே
பேரூரு மிடபவா கனமுமிங்கே
 பிறப்பிறப் பற்றிடக் தானுமிங்கே
சீராருஞ் சிவஞான போதந்தன்னைத்
 தெளிந்து தெளிந்துநின் றாடாய்பாம்பே. (௪)

பாம்பாட்டி முற்றுப்பெற்றது.

---

## ௧௨௪ - வது நிலம்.

குறள்வெண்செந்துறை.

வேறுகூறொன் றுமிலாதநிலம் வேதாந்த மெய்ப் பொருளானநில, மாறியறிந் தாறியுநிலமங்ஙனேயாகி யிருந்தநிலம். (௧)

எல்லாவழக்குங்கடந்த நிலமேகமேயாகி யிருந்த நிலம்,பொல்லாங்குதன்னிற்புகுதாநிலம் பூரணபோத மாய் நின்றநிலம். (உ)

கல்விக்கடலைக் கடந்தநிலங் கற்பனை யெல்லாந் தவிர்ந்தநிலஞ், சொல்லற்ற சோதியாய் நின்றநிலஞ் சோகமோகாதி துறந்தநிலம். (௩)

அறிவே வடிவாயிருந்த நில மாற்றனுடையார மர்ந்தநிலம், பிறிவே துமின்றியிருந்தநிலம் பிரமப்பெருவெளியானநிலம். (௪)

சித்தஞ்சிவமாயிருந்தநிலஞ் செய்வனவொன்று டன்கூடாநில, முத்தனுமுத்தியுமானநில முக்குண மெல்லாமுடிந்தநிலம். (௫)

நில முற்றுப்பெற்றது.

## கஉ௫-வது தட்டான்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பந்தமாம் பணிசெய்யுந் தட்டா னென்றும்
பலதார் பதக்கஞ் செய்யுந் தட்டான்
முந்து நாணவனை பண்ணுந் தட்டான்
முற்பவ மெல்லா முடிவுசெய்யுந் தட்டான். (௧)

இருவினைத் தளைசெய்யுந் தட்டா னெனைத்
தளப்பமு நன்றாய்ப் பண்ணுந் தட்டான்
சரியுடற் சரிசெய்யுந் தட்டான் றெருந்தச்
சங்கிலி பண்ணும்வீ ரத்தட்டானே. (௨)

ஐயஞ் சாவடங் கோக்குந் தட்டா
னைசையணி கட்டுவடம் பண்ணுந் தட்டான்
மெய்யுள்ளக் குழைசெய்யுந் தட்டான் ஞான
மெய்க்குழை செய்யும்வீ ரத்தட்டானே. (௩)

அறுதொழி லாழிசெய் தட்டா னென்று
மருமறைச் சிலம்பு செய்யுந் தட்டா
னாறுமுயி ருடல்கோத் தங்கு லகே
மூடன் செய்யும் வீரத் தட்டானே. (௪)

மையுற்ற பவபா சக்கு ழைசெய்
வயிர வீடது பண்ணுந் தட்டான்
செய்யுற்ற தொழிறனைய் முழுதுஞ்
சிவப்பிர காசமொன்றுந் தட்டானே. (௫)

தட்டான் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## நூற்றிருபத்தாறாவது
## ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி.



### இரட்டைநூல் வெள்ளசெந்துறை.

சாத்துந் தனிமாலை தானானே ஞகிலலோ
  தம்பிரா னுக்குகெற்றித் தாரானே ஞகிலலோ
வேத்து மடியார் திரளானே ஞகிலலோ
  வெம்பிராற் கேதேனு மொன்றானே ஞகிலலோ.

பூங்கோயில் செய்கைக்குப் பூவானே ஞகிலலோ
  பூவோடே யேறிய நாரானே ஞகிலலோ
பாங்கா மடியார்க்குப் பாங்கானே ஞகிலலோ
  பரமன் றிருப்பணிக் காளானே ஞகிலலோ. (உ)

இட்ட திரிமுண்டந் தானானே ஞகிலலோ
  விலங்குந் திருச்செவிப் பூணானே ஞகிலலோ
கட்டிய வீரக் கழலானே ஞகிலலோ
  கழலுக் கிசைந்தசெய் காலானே ஞகிலலோ. ()

உருகு மடியா ருளமானே ஞகிலலோ
  வுவந்துவந் தேத்து முறையானே ஞகிலலோ
பெருகிச் சொரியுங்கண் ணீரானே ஞகிலலோ
  பெருமா னுக்குநானும் பித்தானே ஞகிலலோ.

கலையறப் பார்த்தருட் கண்ணானே ஞகிலலோ
கண்ணிற் கருணைக் கடலானே ஞகிலலோ
தலைபிறந்த செய்ய தாளானே ஞகிலலோ
தாடந்த தம்பிரான் குருவானே ஞகிலலோ. (௫)

ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி முற்றுப்பெற்றது.

## கஉஎ-வது அம்மானை.



இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மாயைக்கு வடிவு கொடுப்பர்கா ணம்மானை
மாயையா லுலகு வளப்பர்கா ணம்மானை
யாயி லறிவா யிருப்பர்கா ணம்மானை
யாயாத போதுலக மாவர்கா ணம்மானை. (௧)

பார்க்கி லுலகம் பழுதைகா ணம்மானை
பாராத போது பழுதைபாம் பம்மானை
யார்க்கு மரிய வரிதுகா ணம்மானை
யற்ற திறையடிகண் மற்றிலா வம்மானை. (௨)

ஊனொனுந் தூணி லுதிப்பர்கா ணம்மானை
யோரா ருடலைப் பிளப்பர்கா ணம்மானை
யானென தென்னவொண்ணு வின்பங்கா ணம்மானை
யின்ப துன்பமற் றிருப்பர்கா ணம்மானை. (௩)

பத்திக் கடலி லமிழ்ந்தங்கா ணம்மானை
பார்க்கில் பரஞ்சோதி யாவர்கா ணம்மானை
யெத்திக்கு மெப்போது நிற்பர்கா ணம்மானை
யீதிலாப் போதமா வர்கா ணம்மானை. (௪)

உண்டபா னங்க ளுயிரள வம்மானை
யோரின் மனத்தே சுகதுக்க மம்மானை
கண்ட நரைமரணங் காயத்தே யம்மானை
காண்பா னுக் காறான மில்லைகா ணம்மானை. (௫)

ஆறுபா வங்களு மில்லைகா ணம்மானை
யாறுகோ * தானு மப்படியே யம்மானை
பேறு மிழவுமில்லாப் பேரின்ப மம்மானை
பேதா பேதமில்லாப் பிரமங்கா ணம்மானை. (௬)

அம்மானை முற்றுப்பெற்றது.

---

## ௧௨௮-வது காளம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அன்னிய மில்லையென் றூதேடா காள
மானந்த மானேமென் றூதேடா காளந்
துன்று கடரேயென் றூதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றூதேடா காளம். (௧)

---

* கோதுகாமாதி-கோடியென்றும்பாடம்.

பிறவி கழிந்ததென் றூதேடா காளம்
பேதைமை தீர்ந்ததென் றூதேடா காளம்
அறிவே வடிவென் றூதேடா காள
மறியாமை போனதென் றூதேடா காளம். (௨)

கோசங் குலைந்ததென் றூதேடா காளங்
கூரறி வானதென் றூதேடா காளம்
பாசம் பறிந்ததென் றூதேடா காளம்
பரமே பரமமென் றூதேடா காளம். (௩)

பற்றற்று நின்றோமென் றூதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றூதேடா காள
முற்ற வுணர்வேயென் றூதேடா காள
முள்ளொளி யானோமென் றூதேடா காளம். (௪)

உள்ளது போதமென் றூதேடா காள
முலகமோக் காளமென் றூதேடா காளம்
வெள்ள வெளியிதென் றூதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம். (௫)

ஊனே மறிவதென் றூதேடா காள
முணர்வே பிரமமென் றூதேடா காள
நானே யனேமென் றூதேடா காள
நானுவ தில்லையென் றூதேடா காளம். (௬)

உண்மை வடிவேயென் றூதேடா காள
முட்புறம் பில்லையென் றூதேடா காளந்
திண்மை யறிவேயென் றூதேடா காளந்
திசைதிசை தோறுநின் றூதேடா காளம். (௭)

சாதி கழிந்ததென் றூதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றூதேடா காளஞ்
சோதி சுகமேயென் றூதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றூதேடா காளம். (அ)

காள முற்றுப்பெற்றது.

---

## ௧௨௯-வது ஆவாள்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உள்ளா னொருவன்கா ணவாளே யுனையலதொன்
றுமில்லை யாவாளே, விள்ளா னொருக்காலு மாவாளே
வேண்டுந்தே வைகொள்வா னவாளே. (க)

பண்டே யெனக்கடை யாவாளே பற்றித்தென்
னலேகா ணவாளே, கண்டே மதிகெட்டே னவாளே
கண்டுகூடக் கைவிட்டே னவாளே. (உ)

தேடுமவ னேனேகா ணவாளே தேடப்படு மவ
ரல்ல ராவாளே, வீடுமவர் தாமேகா ணவாளேவேண்
டுந்தே வைமீட்பராவாளே. (௩)

காரியஞ் செய்யார்கா ணவாளே கண்ணாலே
கழிப்பர்கா ணவாளே, நேரியர் கூரிய ராவாளே நிற்
பரெங் கும்போகா ராவாளே. (ச)

வாயுங் கையுமில்லை யாவாளே வாவென் றழைக்
கவல்ல ராவாளே, யெய்வு மோய்வுந்தரா ராவாளே
யெப்போதும் வாய்தாரி யாவாளே. (௫)

பேதித் திடத்திலு மாவாளே பேரா திருப்பர்கா
ணுவாளே, யோதிக் குடிகெட்டோ மாவாளே யுனையு
மெனை யுங்கை விட்டா ராவாளே. (௬)

வஞ்சனை செய்வார்கா ணுவாளே வாக்கு மனம
ழிப்பா ராவாளே, நெஞ்சு கலங்கினு மாவாளே நேதி
யென்று நிற்ப ராவாளே. (௭)

ஓராத போதுளா ராவாளே யோரி லொளிப்
பர்கா ணுவாளே, * யோராத நீயவராவாளே யெல்லா
மறிவுகா ணுவாளே. (௮)

ஆவாள் முற்றுப்பெற்றது.

* ஏராகாதவென்பது-ஏராதவென விகாரமாயிற்று.

சிவமயம்.

## கஅ௦-வது சோதனை.



### இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பூணப் படாதன பூண்டு
போர்த்துடுத் தப்புறம் பேதிரி வேனைக்
காணப் படாயென்று சொல்லியெனிற்
கண்ட தனைத்துங் கழித்துவிட் டானே. (க)

எட்டாங் கரணத்தி னுள்ளே
யேவின காரியஞ் செதிருப் பேனை
வெட்ட வெளியினிற் காட்டி
வேற்று முகந்தோன்று வேறுசெய் தானே. (உ)

உலகர்க் கிசைய நடந்திட்
டொன்றுமுள் ளன்றென் றுணர்ந் திருப்பேனைச்
சிலுகற்ற சிற்பர மாக்கியெனிற்
சேரு மனத்தையுஞ் செம்மை செய்தானே. (ங)

காரிய முண்டென்று சொல்லிக்
கண்ணுக்கெட் டாதே கடக்கப் போவேனை
யாரியன் வந்துபுக் கென்னை
யப்போதே யானந்த மாக்கி விட்டானே. (ச)

சொல்ல வொண்ணாதன சொல்லிச்
செவியோடு கண்வாய்கள் சோதித்துப் பார்த்தென்
னெல்லை யிலாவறி வாகி
யானு மிதன்றி யினிதிருந் தேனே. (ரு)

கிட்டனு மாய்ப்பட் டனுமாய்க்
தேசத்துள் ளாளொரு வன்சொல்லப் போகப்
பட்ட விதனமும் பாரீர்
பரிபூர்ண மேயின்னு மானது பாரீர். (௬)

நீருக் குமிழியது போல
நிலையில்லா வாக்கைக்கு நேசித் திருந்தே
யாருக்கு நன்மைசெய் தோதா
மறிவே யகண்டமு மாய்வறியாதே (எ)

ஏழைத் தனந்தனி னாலே
யென்னில்வே றில்லையென் றேநெடு நாளாய்ப்
பாழுக் கிறைத்தோமு நாமே
பண்டை யறிவை யறியா திருந்தே. (அ)

சோதனை முற்றுப்பெற்றது.

---

## ௧௩௩-வது உளூர்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

* நான்முக னுக்கிட மானவு ரெங்களூர்
நான்மறை யுந்துதி செய்யுமூ ரெங்களூர்
தேவுக்குந் தேவா யிருக்குமூ ரெங்களூர்
தேவர்க ளன்றித் திரியுமூ ரெங்களூர் (௧)

---

* இச்செய்யுள் நெடின்மோனை-எதுகையின்று.

தோற்றர வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோகமோ கங்க டுறந்தவூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைந்தவூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர். (௨)

காமக் குரோதங் கழிந்தவூ ரெங்களூர்
கல்விக் கடலைக் கடந்தவூ ரெங்களூர்
நாமரூ பங்க டவிர்ந்தவூ ரெங்களூர்
ஞானமே யாக நவின்றவூ ரெங்களூர். (௩)

அறிவிட் டறியாமை போக்குமூ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாதவூ ரெங்களூர்
குறிபிட்டி தென்னவொண் ணாதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர். (௪)

புத்தி விகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர். (௫)

எட்டுத் திசையு நிறைந்தவூ ரெங்களூ
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்தவூ ரெங்களூர். (௬)

உலகத்தை யெல்லா மொருக்குமூ ரெங்களூ
ருண்மையொன் றாகியொன் றானவூ ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானவூ ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்தவூ ரெங்களூர். (௭)

உன்னைப் படாவுணர் வானவூ ரெங்களூ
ருள்ளொளி யாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கழிந்தவூ ரெங்களூர். (௮)

கத்துஞ் சிறுகு மிலாதவூ ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றவூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்தவூ ரெங்களூர். (௯)

ஊர் முற்றுப்பெற்றது.

---

## ௧௩௨-வது வாரணம்.

இரட்டைக்குறள் வெஃசெந்துறை.

வினைவி லங்கு கழற்றிய வாரணம்
வீரத கம்ப முறித்திடும் வாரண
மெனதி யானென் கணையை முறித்தெறிந்
தெங்கு மாமமிழ் தாகிய வாரணம். (௧)

கரணப் பாகரை வீசிய வாரணங்
கருணை மாமலை மேவிய வாரண
மரண மாமறை யீறு முழக்கவே
யறநல் வீதியி லேவரும் வாரணம். (௨)

பத்தி வண்கோலுக் குளைந்தநல் வாரணம்
பாசக் கயிற்றூற் கட்டுறு வாரண
முத்தி மாமடு விற்படி வாரண
மூல மாமத வாரணம் வாரணம். (௩)

அன்ப ரன்பளற் றிற்படும் வாரண
மான்ற மாமத மேபொழி வாரணம்
வன்பி லோடு மணிதரை வாரியே
மாசு சேர்தர யத்தெறி வாரணம். (௪)

சமய வைம்பொழில் சாடியே யைந்தெனுந்
தழைமு றித்தயி லுந்தனி வாரண
மமைய வாறினர் மேல்கொளும் வாரண
மாதி மூலமென் றேத்திடும் வாரணம். (௫)

கத்த வாதங் கடிந்தநல் வாரணங்
கவள மாவண்ட முண்டதோர் வாரண
நித்த வாரரு ளின்பட்டங் கட்டியே
நீச னேனையு மாண்மத வாரணம். (௬)

அலம லக்குறு மென்மனந் தன்னையே
யசைவ றச்சிவ மாக்கிய வாரணங்
கலக லப்பைநூற் கட்டுரை யொன்றினாற்
கரிச றுத்தநல் வாரணம் வாரணம். (௭)

கொச்சை வன்குலச் சாதிச் சடங்கெனுங்
கோடு வான்கொம் பற்றநல் வாரண
மச்ச மேது மறுத்தெனை யாண்டுகொண்
டிட்ட மாமத வாரணம் வாரணம். (௮)

மூவ ரும்பணிந் தேத்திடும் வாரண
முடிவில் கற்பகச் சோலையில் வாரண
மாவ வென்றடி யாருட னென்னையு
மாண்ட மாமத வாரணம் வாரணம். (௯)

வாரண முற்றுப்பெற்றது.

---

## ௧௩௩-வது

## மெய்ஞ்ஞானவிளக்கம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆடு பார்க்குதேடா வாரக் கோனே
யண்டையப் படர்ந்துதேடா வாரக் கோனே
யோடி மறியேடா வாரக் கோனே
யுள்ளே மறியேடா வாரக் கோனே. (௧)

குறுகவளை குறுகவளை கோலக் கோனே
குரவனடி குறுகவளை கோலக் கோனே
குறுகவளைத் தவிழவிராய் கோலக் கோனே
குரம்பை தனைக் குலையவிராய் கோலக் கோனே.

ஓடியிடு காடேநான் * போகு தேனே
யோடாமை யுள்ளே மறிக்கு தேனே
யோடாமை யுள்ளே மறித்த வாறே
யோவாமை நின்று நடுங்கு தேனே. (௩)

ஓவாதே நின்று நடுங்கு மென்னை
யுள்ளே புகத்திரியத் தள்ளு தேனே
காவா நரகமுங் கைக ழன்று
கருதாமங் கொன்றையுங் காண்கி லேனே. (௪)

காணாதே நின்று கழியு மென்னைக்
காவிட்டுக் காவிட்டுப் பாயு தேனே
காணாத கண்ணைத் துடைக்கு தேனே
கதிர்போ லறிவங்கே காண்கு தேனே. (௫)

அறிவா லனைத்தையுங் காண்கு தேனே
யறிந்த வறிவா யிருக்கு தேனே
பிறியா வறிவா யெனையு மந்தப் ;
பேச்சற் றிடத்தி லொளிக்கு தேனே. (௬)

பேராமை பேச்சற் றிடத்தே வைத்துப்
பேரின்பப் பாற்சோ றிடுகு தேனே
யாராதே நான்வாரி யுண்கு தேனே
யடையவு நானா யிருக்கு தேனே. (௭)

---

* இப்பதிகத்தில் மூன்றுவதுமுதல் ஒன்பதாஞ்செய்யுள் வரைக்கும் அடிகளினீற்றுச்சொற்கள் காலவிடையிலே குறைந்து மருவிநின்றன.

உண்டு களித்துநின் றாடு தேனே
யோவா தொளிரநின் றாடு தேனே
யண்ட மதிர்ந்துநின் றாடு தேனே
யலைவறக் கொட்டிநின் றாடு தேனே. (௮)

உண்மைக் குழலைநின் றூது தேனே
யுரைமாண்டு சும்மா விருக்கு தேனே
வண்மைக் கருணை வளர்த்தை யுன்னி
மறுகி யுடைந்துக்குப் போகு தேனே. (௯)

ஆதர மிக்குநின் றாடாய் கோனே
யதிசய மிக்குநின் றாடாய் கோனே
சாதியை விட்டெறிந் தாடாய் கோனே
சதுரினை விட்டெறிந் தாடாய் கோனே. (௧௦)

மெய்ஞ்ஞானவிளக்கம் முற்றுப்பெற்றது.

---

## ௧௩௪-வது குறி.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதிப்பிரமத் திருக்குமறியாமை யாகாசாதி பூதமாய்ப்,பூதத்திரளாம் புலன்களொருபதாய்ப் போகும் பொறிகளாயே, யோதக்கரும் வாக்காதிகரணநான் கோங்கிய சோலைக்குள்ளே, வேதத்தலைவன் வருங்குறியாமிந்த வேதாந்தத்துட்குறியே. (௧)

ஏகனனேகனிடை யொருவரின்றியெங்குநிறைந் துநின்று, போகம்புலன்கள் பொழுதுபுணரினும்போ தமே யாகிநின்றோன், மோகங்கழியமுன் வேடன் கொண்டென்பான் முத்தியளித்தபோதே, யேதும்பி றவியென் றிடக்கண்டிடித்திடுமின்றே வருங்குறியே.

அங்குமொருகுறை யின்றியழியாவறிவா யிருக் கையாலு, மிங்குமொருகுறை யின்றியினியனவேக மாய் நிற்கையாலும், பொங்கும்பிறவியும் பூதப்புலன் களும் பொய்யாயிருக்கையாலு மெங்குநிறைந்தவ னென்னையருள் செய்வானென்றே யிடுங்குறியே. (௩)

பூணும்புலன்க ளனைத்தையும் பொய்யாய்ப் பொருந்திக் கழரறவும், பேணுமனந்தப் பிரமநாமா யிடப் பேசாதுபேசிடவுங், காணுங்கனவுநான் கண் டகிமித்தமுங் கண்டோடிடப்பனவும், வீணன்றுகா ணும் விமலன்வருகைக்கு மெய்யேயிடுங்குறியே. (௪)

நீசெய்வினையா னிலையாதவூனையெடுத்து நெடுநா ளெல்லாம், வீசேழுலகில் விழுவதெழுவதாய் வீணேயு முன்றேயென் றோசைபரிச முருவஞ்சுவைகந்த மோரி லுணர்வாகுமென், றோசையறக்க வமலன்வருங்குறி யங்கத்திடுங்குறியே. (௫)

சலியாதுலக மனைத்தைதயுநோக்கிச் சனனமர ணங்களு, மெலியாவிகபர லோகங்கடன்னில்வெறுப் பும் விழைவியாவையும், பலியாதேபசசென் றிருந்த

வனைத்தையும் பார்த்துப்பரமொழிய, நிலையாமலென்னெஞ்சுதன்னில்வருங்குறி நித்தன் வருங்குறியே. ()

ஆருமறிபாவறிவதே நானென்றிட்டானந்த மாகச்செய்தே, தூரனணியனயக்கன்மயக்கறுத்தோ ரூமம்மாயைபிறு, லோரறிவாகவுணர்த்த வுணர்வாகுந்தம்மை யுணர்ந்தபோதே, பேரறிவாய்ப்பி னன்றியப்படாமை பிரமநாமாங்குறியே. (௮)

தன்னையறியா திருந்தான்றனைப்பிறைதா ன்றிவித்தபோதே, யன்னியமின்றி யகண்டபோதம்மா யறிந்துமறியாவிடிற், பன்றுமறையும் பரமேநீயென்று பணித்தபடியதுவா,பின்னதிதுவென் றியம்பவொண்ணுப்பரமென்னுங்குறியதுவே. (௯)

தந்தைதாய்சுற்றந் தனையந்தமாகவே தரணியிலுள்ளதெல்லாம், பந்தமேயன்றிப் பயனில்லையென்றுபின் பாசம்பறித்தபோதே சிந்தையவற்றினிற் [illegible]தவண் [illegible] செறுத்தேயறத்தையுன்னி, வந்தபடிகண்டு மானமற்றில்லது மாயையறுங்குறியே. (௧௦)

அத்தனைகாலமறிந்தவர்தம்மிலடங்கியிருப்பதுவு, மித்தனைகாலமிவ் வூனையெடுத்த விருவினைப்பற்றறுதுவு, மத்தனருமறை யாலதுநீயென்ன யானவனானதுவு, நித்தனைய் முத்தனைய் நேரொருவரின்றி நிற்கவருங்குறியே. (௧௦)

துறி முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

# ௧௩௫-வது கனவுரை.

கலிவிருத்தம்.

உண்மையே யாகி யுலகுதிப் பதன்குன்ன
முண்மையிற் றொன்று முணராமை யாலுகித்
தூண்மையா லேவளர்க் குண்மையி னுள்புக்குக்
கண்மையாய்த் தோன்றக் கனக்கண்டேன் றோழிநான்.

வானே முதலாய வையம் படைத்தபி
னூனே புகுந்துநின் றுள்ளடங் கிக்கொண்டு
நானே முதலாம் பிரம முதலாகத்
தானே தழைக்கக் கனக்கண்டேன் றோழிநான். (௨)

பண்டமுண் டென்று பரங்கெட் டிராதேநீ
விண்டிடும் போதேவே தாந்தத்தை நோக்கிட
வண்டமே யாத லகண்டமே யாதல்
கண்ட தழிக்கக் கனக்கண்டேன் றோழிநான். (௩)

மொய்தவத் தாலுன்னை முற்ற வுணர்ந்திட்டுச்
செய்தவத் தாலுன்னைச் சிந்திக் கிராதேநீ
கொய்தநற் கூற்றையுங் கொண்டநற் கோதையுங்
கைதவ மாகக் கனக்கண்டேன் றோழிநான். (௪)

எங்கள் பெருமா னிணையடி சென்னிமேற்
றங்கும் படிதந்து தாமரைக் கண்களாற்
பொங்கும் பிறவிகள் போயகலப் பார்த்துக்
கங்குல் கழியக் கனக்கண்டேன் றோழிநான். (௫)

அன்னை மறையாக வப்ப னறிவாக
வுன்னிய போதே யுலகையு மூனையுந்
தன்னி லொளித்திடத் தன்குண மாங்கேயாய்க்
கன்னி பிறக்கக் கறுக்கண்டேன் றோழிநான். (௬)

வேரிலா மாயைதான் வித்தாகிப் பூதமாய்ப்
பாரிலே தட்டப் பரந்து பலகொம்பா
யீரிலை யாயிக் கிரியங்க ளேபூத்திங்
கோரி லொளிக்கக் கறுக்கண்டேன் றோழிநான். (௭)

சத்துக்குற் பத்திமுன் சத்தாகலா வில்லைச்
சத்தா வதுக்கு மசத்தலால வேறில்லைச்
சத்து மசத்துமாய்ச் சந்திப்ப தொன்றில்லைப்
பித்தம் பிதற்றக் கறுக்கண்டேன் றோழிநான். (௮)

பற்றிலா தானொருவன் பார்த்திட்ட பார்வையான்
மற்றில்லை மாயை மரமுறிந்து பேரறிவாய்க்
கற்றிலாக் காக்கைக ளெல்லாங் கனியுண்ணச்
[illegible]லே பார்[illegible]க் கறுக்கண்டேன் றோழிநான். (௯)

பேரா வுற்கத்தாற் பெண்டிர் மகச்சுற்ற
மூரா ரொத்தா னுறக்கத்தி னின்றேனைச்
சீரார் மறைவீரை ஸ்ரீபுருஷோத்தம
னோரா வுணர்த்தநா னுள்ளொளியா னேனே. (௧௦)

கறுவுரை முற்றுப்பெற்றது.

———

உ

சிவமயம்.

## கீகடகா-வது குறத்தி.



### கலிவிருத்தம்.

பேதை வனம்புக்குப் பிணிழைப்புப் பின்சூழச்
சாதி பலபேசிச் சரித்திடுங் குறத்தியல்லேன்
கேதம் பலவின்றிக் கீழ்மேலொன் றில்லாத
போத வடிவாம் புரையறுங் குறத்தியேனே. (க)

தில்லை வுபாதிகளை திருபியா நிலையாலே
பொல்லாத விடயத்திற் புகுந்துவிழுங் குறத்தியல்லே
னெல்லாம் பிரமமென வெண்ணில்லே றிலைகண்டு
சொல்லா லுணரவொண்ணாச் சுகமாங் குறத்தியேனே.

மின்னிக் கழிந்தாற்போல் வீழுங் கனவுடலை
யுன்னிப் பலனு ளுறவுசெய்யுங் குறத்தியல்லேன்
றன்னைத் தனிற்கண்டு சத்தாதி யிந்தியங்க
ளொன்னுக் கினிமையென விழித்திடுங் குறத்தியேனே. ()

பச்சை வடம்பூண்டு பாங்குழவி யக ... சார்த்த
பிச்சை பலகொண்டு பிழைபோங் குறத்தியல்லே
னச்ச மறுத்துறந்த வதிகாரி குடிரேறும்
விச்சை பலசொல்லி விளையாடுங் குறத்தியேனே. (ச)

கட்டருங் கரணமென்னுங் கடுநாய்கள் புடைசூழப்
புட்டி றலைவைத்துப் போய்மீளுங் குறத்தியல்லேன்
சிட்டனடிசூடிச் சிவனே பிரமமென்று
விட்டுவிடா தொன்றில் விளையாடுங் குறத்தியேனே.()

விதிகள் பலபிதற்றி மேதினி புற்பரப்பி
நிதிகள் பலதேடி நெய்தாவுங் குறத்தியல்லேன்
மதிகள் பலவிட்டு மரணபவ மானம்விட்டு
விதாவது வென்றே யேகமாங் குறத்தியேனே. (௬)

ஊனைவடி வென்றெண்ணு முலகிற் பிறந்திருந்து
கானல் புனலென்று கருதிடுங் குறத்தியல்லே
ஞானமதப் பட்டதுபோ லாரணக் காட்டினுள்ள
தேனறிவை யுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. (௭)

குத்துத் தினைகுத்திக் கொழுமரத் தேன்வாங்கி
யத்திற் குழைத்துண் டறஞ்சொல்லுங் குறத்தியல்
முத்திமலை யேறிமுடி யாதவா னகத்தேனைத் [லேன்
தித்திக்க வுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. (௮)

கேடுபடு முடறனக்குக் கீழாய கிழங்குகல்லிக்
காடு மலையுங் கருதியிடும் குறத்தியல்லேன்
பாடு மறையிற் பரம்பிரம முநானுங்
கூடும் வகை[illegible]க் குனித்திடுங் குறத்தியேனே. (௯)

பொற்றித் தலைக்கொண்டு பூமச் சோதியாத
மூற்ற மதுவாக வுட்சோதி யுரைபத்து
மாற்றும் பவமென்ன மனத்தோடே யதிகரித்துக்
கூற்றங் கனவிலுங் குறுகிடாக் குறத்தியேனே. (௧௦)

குறத்தி முற்றுப்பெற்றது.

———

உ

## சிவமயம்.

## ௧௮௭-வது ஊசல்.

---

### கலிவிருத்தம்.

ஆரணமாங் கால்களூட்டி யறிவாங் கயிறது தூக்கிப், பூரணமாம் பலகைசேர்த்துப் புத்தியதிற் பொருந்தவைத்து, வாரணியு முலையார்தங்கள் வலையிற்போகாவண்ணங்காத்துச், சீரணியுஞ் சித்தம்வேறு திரியாவண்ண மாடிரூசல். (௧)

தாருகா வடிவுதன்னை தாருக நம்வடிவை [க்குமாயையூறோடொன்றப்பண்ணியொன்றிலொன்றைமறைதானேதா னறியவேண்டிச் சத்திநே டசத்துமின்றி வாருகி பூதங்களுமா மாயைபோச்சென் றாடிரூசல்.

வேதமுத னீர்தரித்து விதித்தகன்மம் பலவுஞ்செய்து, சாதிபேதம் பலவுண்டாகச் சமைந்தான்ஞானம்பிறக்குமோதான், வேதவதிகாரச்சான்றேல் விதித்தகன்மந் தனக்குமுன்னே, சாதன நாலுமுண்டேயாகிற் சமைந்ததேயென் றாடிரூசல். (௩)

கரைபுரளப் பெருகுமாறற்றிற் கங்குறங்கி நில்லாதாற்போ, லுரைமுதலாம் யோகத்தாலே யொருமைதன்னைக் குலைக்கவல்லை, விருமையென்னு மாற்றையேறி யேகமண்டபத்திருந்து, பிரமமென்னும் பார்வையாலே பிறவாவண்ண மாடிரூசல். (௪)

புக்தேந் திரியங்கண்முதற் பொறிகடன்மேற்
புணரும்போது, நித்திரையில் வந்தபோது நின்ற
போது நில்லாப்போது, மித்தையுங் காண்கையாலே
யெங்குமுள்ளானேகமாயே, யத்தையு மறிகையாலே
யறிவானென் றுடிரூசல். (௫)

பதினெட்டு வடிவமதாகிப் பரலோக மேறலா
மென்று, கெதிகெட்டமனிதர் சொல்வெள்ளிக்கேடு
பாட்டைக் கேட்கவேண்டாம், விதிகட்டா வேதாந்
தத்தின் விளங்குஞான மெய்ச்சுடரை, மதிகட்டாதே
யறிந்தபோதே மாயைபோச்சென் றுடிரூசல். (௬)

மேதினியே பாதமாக விரியும்வானே யுதரமாகப்
போதுமதி முகமதாகப் புரந்தானூர் முடியேயாக
வேதமாதி வாயதாக விரியும்வாயு வுயிரதாக
வாதியிலே யவதரித்த வவனேநானென் றுடிரூசல். ( )

புரிபூ[illegible] யரவுதோன்றிப் போனபோதும்
[illegible]ம், புரியதுவே யாறைற்போலப் போத
மாகும் •டகண்ணந்தானென்னி, லெரியொடு நீர்பவன
மண்விண்ணெல்லாந் தோன்றியழியும்போது, வரி
யமா வையத்தில் வீழுங்காமமாயவாடிரூசல். (௮)

ஊசல் முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

# ௧௩-அ-வது கழல்.

---

## கலித்தாழிசை.

ஒன்றேகாண் பெண்ணே யுலகம் பதினாலு
முள்ளது போதமென் றாடாய்கழ
லொழிவற நின்றோமென் றாடாய் கழல். (௧)

இரண்டுகாண் பெண்ணே யிடையிங் கலைக
ளிரண்டுமொன் றானதென் றாடாய்கழ
லேகாந்த மானோமென் றாடாய் கழல். (௨)

மூன்றுகாண் பெண்ணே முடிவான மண்டில
முத்திக்கு வித்தாமென் றாடாய் கழன்
முந்நிலா வீசுதென் றாடாய் கழல். (௩)

நாலுகாண் பெண்ணே நாடினா னடியுநன்
னாதமே சோதியென் றாடாய்கழ
னம்மை யுணர்ந்தோமென் றாடாய் கழல். (௪)

அஞ்சுகாண் பெண்ணே யறிவே நமக்கென்றுந்
தஞ்சமாய் நின்றதென் றாடாய்கழ
றானேதா னானதென் றாடாய் கழல். (௫)

ஆறுகாண் பெண்ணே யல்லல் கழிந்தபின்
னானந்த மானோமென் றாடாய்கழ
லாசை யொழிந்தோமென் றாடாய் கழல். (௬)

எழுகாண் பெண்ணே யெல்லா நிலைகளு
மிந்திர ஜாலமென் றூடாய்கழ
லெமக்கழி வில்லையென் றூடாய் கழல். (எ)

எட்டுகாண் பெண்ணே சுற்றக் குழாமென்னுங்
கட்டதை விட்டோமென் றூடாய்கழல்
காணாத கண்டோமென் றூடாய் கழல். (அ)

ஒன்பதாம் பெண்ணே யுள்ளே தெளிந்தபின்
மின்போலும் போதமென் றூடாய்கழல்
வேத முடிவதென் றூடாய் கழல். (கூ)

பத்துக்காண் பெண்ணே பரமே பரமாகப்
பற்றற் றிருந்தோமென் றூடாய்கழல்
பத்தி முடிவதென் றூடாய் கழல். (க0)

ஆடுங் கழலா மடியி லொளித்தக்காற்
றேடுவ தில்லையென் றூடாய்கழ
திருவ[illegible]ல்தென் றூடாய் கழல். (கக)

கழல் முற்றுப்பெற்றது.

---

பாடுதுறை முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

# அட்டவணை.



அட்டவணை முற்றுப்பெற்றது.